உ
சிவமயம்.

# கீதாசாரத்தாலாட்டு.

உரைச்சிறப்புப்பாயிரம்.
இஃது
தேவிகோட்டை
வி. ர. லெ. சின்னயச்செட்டியாரால்
இயற்றப்பட்டது.



---

போதார்பொழில்சூழ்வன்மீகபுரத்திற்பொலியுஞ்செங்கழுநீர்
மாதார்த்தட்சிறுவூர்த்திமடத்துக்கதிபன்றுரியகி ஊல
மீதாய்த்திகழுஞ்சிவானந்தமேலோன்விரித்தமெய்யுரையாற்
கீதாசாரத்தாலாட்டுக்கிளர்ந்[...]துநீணிலத்தே





உ[...]ரம்

தெய்வங்களின் [...]க்கம்

---

ஐங்கரனறுமுகனருண்மிகுமம்பிகை
சங்கரனயனரிதமைவணங்குதுமே

குருவணக்கம்

:o:

சிதம்பரமாயொளிர்கின்மலமோனச்
சிதம்பரகுருபதந்தினம்பணிகுதுமே

அடியார்கள்வணக்கம்

:o:

சிதம்பரதேசிகன்செய்யபொற்கமலப்
பதம்பரமெனநினைபவர்பதம்பணிகுதும்

## அவையடக்கமும்,
## உரையின்பிரயோசனமும்.

———:o:———

நங் குருநாதனந்தம்நாவினின்றியற்றுவித் த
பங் கமில்கீதாசாரப்பாக்கடமுரையுட்கொள்வோர்
சங் கரனயன்மால்தேவர்சகலரும்புகழ்வதா ன
துங் கமார்சீவன்முத்திச்சுகமனுபவிப்பர்தா மே

## அவதாரிகை.

வடமொழி தென்மொழியில் வல்லமையுள்ள திருவேங்கடநாதனென்னு நூலாசிரியர், தமது பெருங் கருணையினாற்கூறப்புகுந்த விந்நூலானது, நிர்விக்கினமாய் நிறைவேறிப்பெரியோர்களா லங்கீகரிக்கப்பட்டுப் படிப்பவர், கேட்பவர்கட்கே காக்கிரமுதலியனவோ டத்துவித ஞானம் பாலித்துப்பாரம்பரியமாய் வழங்கிவரும் பொருட்டுத் தமது வழிபடு கடவுளாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானை ஞான சூரியனாகத் துதிக்கின்றார்.

———

ஐவகைப்பொருளுநான்குகரணமுங்குணங்கண்மூன்று ஞ்
செய்வினையிரண்டுமொன்றியாவருந்திகைப்பநின் ற
பொய்யிருளகலஞானப்பொருட்கதிர்விரித்தபுத்தே ள்
கைவளையாழிச்செங்கட்கண்ணனைக்கருத்துள்வைப்பா ம்

## இதன்பொருள்.

*ஐவகை-ஐந்துபிரிவாகிய, பொருளும் - பொருட்களையும், நான்குகரணமும்(சங்கற்ப-நிச்சய-அவதான - அபிமானமென்னுந்தொழில்களையுடைய) அந்தக்கரணசதுட்டயத்தையும், குணங்கண்மூன்றும்- (பிரகாசம - பிரவிருத்தி மோகமேசொரூபமாயுள்ள-சாத்வீக-இராஜத - தாமதமென்னும்) திரிகுணங்களையும், செய் - (மனவாக்குக்காயங்களாற்) செய்யப்பட்ட, வினையிரண்டும் (புண்ணியபாவமாகிய) உபயகன்மங்களையும், ஒன்றி - யானென தென்பதாகப்பொருந்தி, யாவரும் - சருவத்திரர்களும், திகைப்ப மயங்குதற்குக் காரணமாக, நின்ற - (மறைப் பேசொருபமாக) நிற்கின்ற, பொய்யிருள்-மித்தையாகிய அஞ்ஞானாந்தகாரமானது, அகல -பரிபக்குவர்கட்கு நிவிர்த்தியாகும்படி, ஞானப்பொருட்கதிர்-ஞானார்த்தங்களாகிய கிரணங்களை, விரித்த-பரப்பிய, புத்தேள்-தெய்வமாயுள்ள, வளை-(பாஞ்சசன்னியமென்னுஞ்) சங்கையும், ஆழி - (சுதரிசனமென்னுஞ்) சக்கரத்தையுந்தரித்த,கை-திருக்கரங்களையும், செங்கண்-சிவந்த (தாமரைமலர்போன்ற)நேத்திரங்களையுமுடைய, கண்ணனை-(ஞானதின கரனென்னும்) ஸ்ரீகிருஷ்ணபகவானை, கருத்துள் வைப்பாம் - இருதயத்தினுள் அபேதமாகவைத்துத்தியானிப்பாம்-(என்றவாறு.)

பொருளும், மூன்றும், இரண்டும், என்பவைகளில் இரண்டனுருபும். கரணமும், என்றதில் சாரியையும் - இரண்டனுருபும் தொக்கன;;

*சத்தஸ்பரிசாதி விஷயங்கள் (க) சுரோத்திராதிஞானேந்திரியங்கள், (உ) வியானாதிவாயுக்கள் (௩) வாக்காதிகன்மேந்திரியங்கள் (௪) சருமாதியாறுதத்துவமாகிய தூலசரீரம் (௫) இவ்வைந்து பிரிவாகிய பொருட்களையே தொகுத்து ஐவகைப்பொருளுமென்றார்.

---

## ஆக்கியோன்பெயரும், முதனூற்பெயரும், நூற்பெயருங்கூறல்.

———:o:———

### வெண்பா.

மாதையர்கோன்வேதநவில்வாய்வேங்கடநாத ன்
காதையுறப்பார்த்தனுக்குக்கண்ணனருள் கீதைக்
கருத்துயர்தாலாட்டாகக்கட்டுரைத்தான்யாரு ங்
கருத்துயர்தீர்ந்தெய்தக்க தி

(இ-ள்)

∴ மாதையர்-மாதைப் பதியிலுள்ளவர்களுக்கு, கோன்-அரசனாகிய, *வேதநவில்-வேதாத்தியயனம் பண்ணுகின்ற, வாய்-வாக்கினையுடைய, வேங்கடநாதன்-திருவேங்கடநாதனென்னும்பிராமண சிரேஷ்டரானவர், காதையுற-சொற் சுவைபொருந்த, பார்த்தனுக்கு—அருச்சுனனுக்கு, கண்ணன் - ஸ்ரீ கிருஷ்ண பகவான், அருள்-அனுக்கிரகம் பண்ணிய, கீதை-பகவற்கீதையினது, கருத்து-தாற்பரியமாகிய (ஞானார்த்தங்களை), உயர் † தாலாட்டாக-மேன்மைபொருந்தியதாலாட்டுப்பிரபந்தமாக, ‡ யாரும்-சருவத்திரர்களும், கருத்துயர்தீர்ந்து-ஜன்மதுக்கமானது நீங்கப்பெற்று, கதி-மோக்ஷத்தை, எய்த-அடையும் பொருட்டு, கட்டுரைத்தான்-உறுதிமொழியாகக்கூறினார் (எ-று)

*வேதநவில்வாய்வேங்கட நாதனென்றமையின் வேதாத்தியயனஞ்செய்குதல் பிராமணர்கட்கேமிகவுமுரித்தென்பதுபற்றி யுரையிற் பிராமணனென விரித்தெழுதினாம்.

†பதினெட்டத்தியாயங்களாற் கன்மம், பத்தி-ஞானார்த்தங்களை மிச்சிரமாய்க்கூறியுள்ள பகவற்கீதையின்கண்-கரும்பினின்றுமிரசத்தைக்கிரகித்தல்போல அந்தரங்கமான ஞானார்த்தங்களைச்சங்கரகித்துத் தாலாட்டுப்பிரபந்தமாகக்கூறினமையின் இது கீதாசாரத்தாலாட்டெனும் பெயருடைத்தாயிற்று.

‡தீவிரதர அதிகாரிகட்குப் பயன்படுதலுமன்றி மந்தாதிகாரிகட்குமினிதுவிளங்கிப்பயன்படுமென்பதுதோன்ற-யாருமென்றார்

∴. மாதைப்பதியென்பதைச்சிலர் மாதேவிப்பட்டணமென்றும் சிலர்திருவாமாத்தூரென்றுங் கூறுவார்கள்.



# நூல்.

சீராரும்பரமார்த்ததெரிசனத்தையருள்செய்ய ... ப்
பேராருந்தேசிகராய்ப்பெருமானேவந்தவரோ ... (க)

இ-ள்.

(a.) பெருமானே-(ஸ்ரீபகவானாகிய எமது)பிரானே, சீராரும்-சச்சிதானந்த கனமாகிய) சிறப்பினைப் பொருந்திய, பரமார்த்ததெரிசனத்தை - எதார்த்தமாயுள்ள ஆத்மதரிசனத்தை, அருள்செய்ய - அருச்சுனனுக்கு அனுக்கிரகஞ்செய்யும் பொருட்டு, *பேராரும்-பெருமை நிறைந்துள்ள, தேசிகராய்-ஞானசாரியராக, b. வந்தவரோ—எழுந்தருளி வந்தவரோநீர், (எ-று)

a. பெருமானேயென்பது விளி

b. வந்தவரோவெனச்செய்யுளினிற்றிலுள்ள-ஓகாரம்வியப்புப்பொருளது-நன்னூல் - இடையியலில்-இரண்டாம்சூத்திரம்-இன்னன வென்றதனால்—பின்வருவனவுமிவ்வாறே.

*சிருட்டியாதிபஞ்சகிருத்தியங்களில் சிருட்டி, திதி, சம்ஹாரந், திரோபவமென்னு நான்கினாலுஞ்சம்சாரதுக்க நிவர்த்தியாகாது அனுக்கிரகமொன்றினால் மாத்திரம் நிவர்த்தியாகின்றமையாலனுக்கிரகமொன்றுமே பெருமையுடைத் தென்பது கூறுமேயமையும் அவ்வனுக்கிரகத்தைக்குரு மூர்த்தமாகவேயிருந்து செய்வதுமரபாயிருத்தலின் குருமூர்த்தியே பெருமையுடையாரென்பது தோன்றப், பேராருந்தேசிகராயென்றார்.

---

திருத்தேரிற்சாரதியாய்ச்சேர்ந்திருந்துங்கீதையி னா
லருச்சுனற்குமெய்ஞ்ஞானமனைத்துமுரைசெய்தவரோ (உ)

இ-ள்.

*திருத்தேரில்-சிறப்புப்பொருந்திய இரதத்தில், சாரதியாய் - தேர்ப்பாகராய், †சேர்ந்திருந்தும் - பொருந்தியிருந்

தும், கீதையினால்-இசைபொருந்தியவுபதேசரூபமான தமதுவாக்கியத்தால், அருச்சுனற்கு-பார்த்தனுக்கு, மெய்ஞ்ஞானம்-தத்துவஞானம், ‡அனைத்தும்-முழுவதும், உரைசெய்தவரோ-அனுக்கிரகஞ்செய்தருளியவரோநீர் (எ-று)

*அருச்சுனனுக்குக் காண்டவதகன சமயத்து அக்கினிபகவானாற்கொடுக்கப்பட்டு நவரத்தினகசிதமாகிய சுவர்ணத்தூபிவைத்துச் சுவேதவாம் புரவிகள் பூட்டியனுமத்துவஜம்காட்டப்பெற்ற அழியாத இரதமானதால்-திருத்தேரென்றார் - இன்னும் சச்சிதானந்த சொரூபமாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானே ஞானாசாரியமூர்த்தமாக எழுந்தருளியிருந்து சத்தியவிரதனாகிய அருச்சுனனுக்குப் பிரமான்மைக்கிய ஞானோபதேசஞ்செய்தற்குஸ்தானமாக அமைதலின் திருத்தேரெனக்கூறினாரெனினும் அமையும்.

†சேர்ந்திருந்துமென-இஃது சிறப்பும்மை கொடுத்துக்கூறியது யாதினாலெனின், ஆசாரிய சிஷ்யக்கிரமம் பிறழ்ந்தமையினென்க அஃதாமாறு-தலையுரோமத்தினெருப்புப்பற்றப் பெற்றவனும் சிலதினமுபவாசமிருந்தவனும் யாதொன்றையும் விரும்பாது ஜலம், அன்னமிவைகளையே அதிவிரைவாக விரும்பித்தேடிச்செல்வதுபோல ஜனன மரண சம்சாரத்தால் வருந்துபவன் அதனை நிவிர்த்திக்கத்தக்க ஞானாசாரியரெங்குளரெனத்தேடி வந்தஷ்டாங்க பஞ்சாங்க நமஸ்கார பூர்வகமாக வணங்கியெழுந்து வாக்கினாற் பலவாறு துதித்துத் தனக்குக்கிருபை வருமளவும் ஆத்தமுதலிய பணிகளைச்செய்துவருகிற சாதன சதுட்டயமுள்ள சிடனதிதீவிரபக்குவனாக இருப்பின் ஏகாந்த ஸ்தானத்தில் அச்சிடன் மிகுந்த பயபத்தி விநயத்தொடு கைகட்டி வாய் புதைத்துத் தாழ்ந்த ஸ்தானத்தினின்று கேட்பத்தானுயர்ந்த வாசனத்தின் கண்ணிருந்து ஞானோபதேசஞ்செய்வது ∴.மரபாயிருக்க அங்ஙனமின்றி அருச்சுனனிருக்குமிடத்திற்சுத்தான் வந்து அவனது ஏவற்றொழில் செய்யுஞ்சாரதியாய்ப் பலருங்கூடிய யுத்தகளமத்தியிற் சென்றுள-இரதத்திற்பாசமனத்தினான-அருச்சுனன் உன்னத ஸ்தானத்திருந்து கேட்பத்தான் தாழ்ந்த ஸ்தானத்திலொருபதமடித்தொருபதம் பொற்றேர் மிதித்



தொருகையிற் கசை குசைபிடித்தொருகையிற் சின்முத்திரை கொண்டிருந்துபதேசித்தமையால் சேர்ந்திருந்தும் என அவ்வுண்மை புணர்த்தாரென்றுணர்க.

∴. மரபென்பது தொன்றுதொட்டு வழங்குமுறைமை.

‡பரோக்ஷஞானம்-அடரோக்ஷஞானமென ஞானமிரண்டாம் அவற்றுள் அபரோக்ஷ ஞானமானது-அதிடாபரோக்ஷ ஞானமெனவும்-திடாபரோக்ஷ ஞானமெனவு மிருவகைப்படுமிவை முழுதுமுபதேசித்தாரென்பது தோன்ற மெய்ஞ்ஞானமனைத்துமென்றார்.

---

செஞ்சமரிற்பந்துஜனஞ்சேதமுறுமென்றிரங் ... கி
யஞ்சியபார்த்தன்பயமாங்ககற்றவருளானோக்கி ... (௩)

## இ.ள்

* செஞ்சமரில்-செவ்விதாகியயுத்தத்தில், பந்துஜனம்-உறவினர்களாகிய யாவர்களும், சேதமுறு மென்றிரங்கி-நாசமடைவார்களென்றிரக்கமுற்று, † அஞ்சியபார்த்தன்-பயந்துள்ள அருச்சுனனது, பயம்-பீதியை, ஆங்கு-அந்த யுத்தகள மத்தியிற்றானே, அகற்ற-நிவிர்த்தி செய்தற்கு, ‡ அருளால்-கிருபையோடு, §நோக்கி-பார்த்து, (எ-று)

* பாண்டவர்கள்செய்யுஞ் சமர்தர்மசாஸ்திரத்தையனுசரித்ததாகலின்செஞ்சமரென்றார்.—

† நம்குருவாகிய துரோணர், கிருபர் முதலியவர்களும் நம்குலத்திலுதித்த வீட்டுமர் துரியோதனாதியருமிவர்கட்குபபலமாக வந்தசுசனப்பரசனர்களாகிய மற்றைத்தேசத்தரசர்களும் தங்கள் தங்களுக்குரியசுகபோகங்களை யிழந்திந்த யுத்தகளத்தினம்மால் மரணமடைவார்களே-மரணமடைந்தாலிவர்களா லிரட்சிக்கப்பட்டுள்ள யாவர்களுந் துன்பமுறுவதுமன்றி யிவர்களாற் செய்யப்பட்டுவருகிற குலதருமங்களும் நாசமடையும்அவைநாசமடையவே குலங்கண் முழுதுமதன்மத்திற் பிரவர்த்திக்கும்அதனால் ஸ்திரிகள் நெறிதவறுவார்கள் அதனால் வர்ணசங்கரமாகும் அதனாலவர்கள் நரகமடைவதுமல்லாம

லவர்களின் பிதிர்கணங்களும் பிண்டோதகங்களாற் செய்யப்படும் சிராத்ததருப்பணாதிகளா லுண்டாகும் பலனை யிழந்து துன்பமுறுவார்கள் இவைகளனைத்திற்கு நாமே காரணமாதலின் நம்மைக்குலக்ஷய கிருததோடம் வந்தடைந்து நரகிலமிழ்த்துமென்றச்சமுற்றவருச்சுனனென்டார் அஞ்சிய பார்த்தனென்றார்.

§அருச்சுனன் மோகத்தாலடைந்துள்ள பயம் நீங்கியாத்மஞான பரனாய்ச் சுதர்மங்களைச்செய்துவரு நிமித்தந் தீக்ஷாக்கிரமமாக அருச்சுனன்மீது பகவான் பூரண திருஷ்டிவைத்தமைதோன்ற நோக்கியென்றார்.

‡பகவான் தனக்கேதேனுமோர் பிரதியுபகாரங்களை யபேக்ஷியாமனோக்கினனென்பதுவிளங்க அருளால்நோக்கியென்றார்.

---

சுற்றமறிற்சோகமெனச்சொல்லினைசற்றறிந்தவன் போற்
கற்றுணர்ந்தபேரதனாற்கலங்கார்காணென்றவரோ (ச)

இ-ள்.

சுற்றமறில்-பந்துவார்க்கங் கணாசமடையுமானால், சோகமென-துக்கம் (வந்துபொருந்து)மென்று, *சற்றறிந்தவன்போல்-கிஞ்சித்துச் சாஸ்த்திரந்தெரிந்தவன்போல, சொல்லினை-கூறினாய், கற்று-(கற்கவேண்டியசாஸ்திரங்களைக்)கற்று, உணர்ந்தபேர்-(அறியவேண்டியவைகளை)யறிந்தமகான்கள், அதனால்-பந்துவர்க்கங்கட்குநேரிடுங்கெதியினால், †கலங்கார்-கலக்கமடையார்கள், காணென்றவரோ-அதனை நீ அறிவாயாகவென்று கூறியருளியவரோநீர் (எ-று)

*தன்னுடைய தேகாதிகட்கு நேரிடுங்கெடுதிகள் பற்றியே தனக்கொருகெடுதியும் வாராதென்பது சுருதியுத்தி யனுபவங்களுக்கொத்த துணிபாயிருக்க அன்னியர் தேகாதிகட்கு நேரிடுங்கெடுதிகள் பற்றித்தனக்குங்கெடுதிகள் நேரிடுமென்னும்மாயாகாரியங்களாகிய தேகாதிகட்கும் அறிவுசொரூபமாகிய ஆத்மாவிற்குமெதார்த்தத்தில் யாதொருசம்பந்தமுமின்றென்றும் க்ஷத்திரியர்கட்குத் துட்டநிக்கிரகஞ் சபதங்காத்தன்முதலியசுதர்மங்களைக்கைவிடுதல் பாவமெனவும் அருச்சுனன் மோகத்தாலற்பமேனுமறியாமல் துட்டர்களாகிய துரியோதனாதியரைக்கொல்வது பாவமெனவும் அப்பாவத்தாற்றுன்பம் வருமெனவுங் கூறினமையாற் சற்றுமறியாதவனென்பது தோன்றச் சற்றறிந்தவன்போலென்றார்.



†ஓரவத்தை மற்றோரவத்தையினிலைபெறாது கெடுதலையுறுகின்றமையின் அவத்தாத்திரயப் பிரபஞ்சங்களனைத்தும் எந்தவேதுக்களினாலு நிலைபெறாதழியத்தக்கனவெனவும் சுத்திகாரசிதங்கானற்சலம்போல் மித்தையெனவும் ஆத்மா அவத்தாத்திரயங்களொன்றிலொன்றுநிலைபெறாதுகெடுதலையுறினும் தான்கெடுதலுறாமலவைகளைச் சாட்சிமாத்திரமாகவிகாரமின்றியறிந்து கொண்டிருத்தலின் எந்தக்காலத்தினும்எந்தவேதுக்களினாலுமழிவையுறாது நித்தியமாயிருக்கத்தக்க சத்தியப்பொருளெனவும் சுருதி-யுத்தியனுபவங்களாலறிந்த பெரியோர்கள் தேகாதிப்பிரபஞ்சங்கட்கு நேரிடுங்கெடுதிகளைநோக்கி கலக்கமுறார்களானமையின் கற்றுணர்ந்தபேரதனாற் கலங்கார்காணென்றார்.

---

கலங்காரோவிறப்புவரிற்கற்றுணர்ந்தபேரோ ... ஞு
மலங்காமனானிருக்கும்வகையுரையுமெனவினவ ... (ரு)

இ-ள்.

இறப்புவரில்-மரணம் வந்தகாலத்து, கற்று-கற்கவேண்டியவைகளைக் கற்று, உணர்ந்தபேரோனும், அறியவேண்டியவைகளை யறிந்த மகான்களாயினும், கலங்காரோ-கலக்கமுறார்களோ— (கலக்கமுறாதிருப்பார்களாகி லவர்களைப்போல) நான்-யானும், மலங்காமல்-மயக்கமுறாமல், இருக்கும்வகை-இருக்கத்தக்கதாகிய வுபாயங்களை, உரையுமென வினவ-அடியேனுக்கனுக்கிரகம் பண்ணுமென்றருச்சுனன் கேட்க,-எ-று).

நான், என்பதில் இறந்தது தழுவிய எச்சவும்மைவிகாரத்தாற்றொக்கது.

நீயுநானும்புவிமேனிருபர்களுமெய்யுணர் வா
லாயுங்காற்பிறந்திறப்பதார்க்குமில்லையென்றவரோ (௬)

இ ள்.

நீயும் - அருச்சுனனாகிய நீயும், நானும் - பகவானாகியயானு ம், புவிமேனிருபர்களும்-பூமியின் கண்ணுள்ள அரசர்களு மாகிய, ஆர்க்கும்-எவர்களுக்கும், மெய்யுணர்வால்-உண்மை ஞானத்தால், ஆயுங்கால்-விசாரிக்குமிடத்து, பிறந்திறப்பது - ஜனித்துமரிப்பது, இல்லையென்றவரோ-இல்லையென்று கூறியருளியவரோநீர்,(எ-று).

உம்மை நான்கில் ஈற்றிலுள்ளது முற்றும்மை ஏனையஎண்ணும்மையாம்.

---

ஈங்கெவர்கரும்பிறந்திறப்பதில்லையென்றீரிவ்வுல கி
னீங்குபவம்யார்க்கிதனை நிச்சயமாய்ச்சொல்லுமென (௭)

இ.ள்.

ஈங்கு-இவ்விடத்தில் ; எவர்க்கும்-சருவத்திரர்களுக்கும் ;பிறந்திறப்பதில்லையென்றீர்-ஜனித்துமரிப்பதின்றென்றுகூறினீர் ; இவ்வுலகில் - இவ்வுலகத்தின் கண்ணே ; நீங்குபவம்-மரித்தல் ஜனித்தலானவை ; யார்க்கு-எவர்களுக்குள்ளன ; இதனை-இவ்வுண்மையை ; நிச்சயமாய்ச்சொல்லுமென உறுதியாகச்சொல்லுமென்றருச்சுனன்கேட்க; (எறு)

ஈங்கு-சுட்டுநீண்டுவந்தது செய்யுளாதலின்,நீங்குதல் ;என்னுந்தொழிற்பெயர்இங்கே-நீங்கு-எனமுதனிலை மாத்திரையாய்நின்றது.

---

இத்தரையிற்பிறந்திறப்பதெடுத்தவுடற்கடுத்த பொறி
நித்தியமாகியவான்மாநின்சொருபமென்றவரோ (௮)

இ-ள்.

இத்தரையில்-இப்பூமியின்கண் ; பிறந்திறப்பது-ஜனித்துமரிப்பது ; எடுத்தவுடற்கு-கருமத்துக்கேதுவாக வெடுத்துள்ள சரீரத்துக்கு ; அடுத்தபொறி – பொருந்தியவிதியாம் *நித்தியமாகிய-(ஜனித்தன்மரித்தலின்றிநித்தியமாயுள்ள; ஆன்மா-ஆன்மாவே, நின்சொருப மென்றவரோ - உனது சொருபமென்று கூறியருளியவரோநீர்-(எ-று)

ஆன்மா என்பதில் பிரிநிலை ஏகாரம் விகாரத்தாற்றொக்கது.

*பிராகபாவம் பிரத்தொம்சாபாவம் அன்னியோன்னியாபாவம்-அத்தியந்தாபாவமென்னு நான் கபாவமுமின்றிச்சதோதயமாயிருப்பதெதுவோ அதுநித்தியம் நித்தியமாயுள்ள ஆன்மாவேதானெனும்விசாரமறியவிரும்பில் எமதுகருணைக்கடலென்னும் பிரமானந்த சாகரசொருபராகிய கோவிலூர்ச்சிதம்பரசுவாமிகள்செய்தருளிய இலக்கணவிருத்தியிற்காண்க-

---

அங்கமுயிரிந்தியநானன்றிவேறெனைக்கா ணே
னிங்கியான்வேறுண்டேலெனக்கறியப்புகலுமென (௯)

இ-ள்.

அங்கம்-சரீரமும் ; உயிர்-பிராணனும் ; இந்தியம்-இந்திரியங்களும் ; நானன்றி-யானென்றறிந்துளனேயல்லாமல் ;வேறு-இவைகளுக்கன்னியமாக ; எனைக்காணேன்-எனது சொரூபத்தைக்கண்டிலேன் ; இங்கு-இச்சரீரங்களினிடமாக ; யான்வேறுண்டேல் - எனதுசொரூபமிவைகட்கன்னியமாகவிருக்குமேயாகில், எனக்கறியப்புகலுமென-அடியேனுக்குத் தெரிந்துக்கொள்ளும்படியனுக்கிரகஞ் செய்தருளவேண்டுமென் றருச்சுனன்கேட்க-;(எறு)

அங்கம்- உயிர்-(பிராணன்)- இந்தியம்-ஆகிய இவைகளில் எண்ணும்மைகள் தொக்கன

---

மெய்யுயிரிந்தியங்களல்லால்வேறறியேனென்றவனு ம்
பையவவைவையாலறியப்படானுநீயென்றவரோ (௰)

இ-ள்.

* பைய-இரகசியமாக; மெய்-சரீரமும்; உயிர்-பிராணனும் இந்தியங்களல்லால்-இந்திரியங்களுமாகிய (விவைகளேயே நானென்றறிந்திருக்கிறனே)யல்லாமல்; வேறு-இவைகட்கன்னியமாக; அறியேனென்றவனும்-(எனதுசொரூபத்தைக்கண்டிலேனென்(றவைகளைவிஷயமா யறிந்தவறிவாயிருந்து) கூறியவனும்; †அவையால்-முற்சொல்லிய சரீரங்களால்; அறியப்படானும்-அறிதற்கு விடயமாகாதிருப்பவனும்(ஆகியபிரத்தியகாத்மசொரூபமே); நீயென்றவரோ-உனது சொரூபமென்றனுக்கிரகஞ் செய்தருளியவரோநீர், (எ-று).

*ஞானத்துக்கதிகாரமின்றிய துரியோதனுதியர் பலருநிறைந்துள்ளயுத்தகளமத்தியிற் சரீரத்திறாப விலக்ஷணமாயுமவைகட்கசோசரமாயுமிராநின்றபிரத்தியகாத்மசொரூபமேயுனது சொரூபமென்றுபதேசிக்குமகாவாக்கியமானது அருச்சுனன் செவிக்குமாத்திரமன்றி மற்றயர்செவிக்குப்புலப்படாதிருத்தற்குப் பகவானிரகசியமாக வுபதேசித்தாரொன்பது தோன்றப்பையவென்றார்.

† அவையாலறியப்படான், எனப்பகவான் கூறியிருப்பதுபோலவேபிரமகீதை-ச-வது சேனுபநிடதார்த்தமுரைத்தஅத்தியாயத்தில்-"வாக்குமனங்கண் செவியான், மன்னிநின்றபிராணனினு-னீக்கியுள்கரணத்தானின் மலன்கோசரிக்கவுருன்,"எனக் கூறியிருப்பதுகாண்க.

---

தேகம்வேருகிலதைச்சேர்ந்ததிவனேதென வே
சோகமேவிளைகருமத்தொடர்ச்சியினுலென்றவரோ (௰க)

இ-ள்.

தேகம்வேருகில்-சரீரமான்மாவுக்கன்னியமானல்: அதை-அச்சரீரத்தினை; இவன்-இவ்வான்மாவானவன்;சேர்ந்தது பொருந்தியது;ஏதெனவே-எதனுலென்றருச்சுனன்கேட்க



*சோகமேவிளை-துக்கத்தையேவிளைவிக்கும்படியான; கருமத்தொடர்ச்சியினுலென்றவரோ- †கரும சம்பந்தத்தாலென்று கூறியருளியவரோ நீர், (எ-று).

சோகம் என்றதில் சாரியையும்இரண்டனுருபும்,-விளைஎன்றதில் விவ்விகுதியும்-தொக்கன

*கர்த்தாவாயிருந்து செய்யப்பட்டவிதி நிடேதமாகிய வுபயகன்மங்களுஞ் சனனமரண சம்சாரதுக்கங்களை விளைவித்தற்கே காரணமன்றிச்சம்சாரநிவிர்த்தியாகிய சுகத்தைவிளைவித்தற்குக்காரணமாகாதென்பது தோன்றத்தேற்றே காரங்கொடுத்துச்சோகமேவிளைகருமமென்றார்.

† வேதாகமங்களாற் புருடர்கட்குப் பிரவருத்தி நிமித்தம் அல்லதுநிவிர்த்தி நிமித்தம் யாதொன்று போதிக்கப்படுகிறதோ-அதுகன்மமாம்-அங்ஙனம் வேதாகமங்களாற் போதிக்கப்படாத இராகத்துவேஷரகிதகமனுகமன சௌசமுதலியஉதாசீனக்கிரியைகள்கன்மமன்றாம்-கன்மமும் - பிரவருத்தி நிமித்தம் போதிக்கப்படுகிறது விகிதகன்மமெனவும் நிவிர்த்தி நிமித்தம் போதிக்கப்படுகிறதுநிஷித்தகன்மமெனவும் இருவகைப்படும். இவைகளில்விகிதகன்மம்-நித்தியநைமித்திக-காமிய-பிராயச்சித்தமென நான்குவிதமாம், இவைகளினிலக்கணங்களை விசாரசாகரமிரண்டாவது தரங்கத்திற்காண்க

---

தேகமெடாமுன்கருமச்செயல்வருமாறேதென வே
யேகமாமரமும்வித்துமெனுமுறைபோலென்றவரோ (௰௨)

இ.ள்.

தேகமெடாமுன்-சரீரமெடுத்தற்குமுன்பு; கருமச்செயல்-கருமங்களைச்செய்யும்படியானசெயல்கள்; வருமாறு - வருகின்றவிதம்; ஏதெனவே-எங்ஙனமென்றருச் சுனன்கேட்க, *எகமாம்-ஒன்றாகிய, மரமும்- (வித்துக்கு) விருக்ஷமும், வித்தும்- (விருக்ஷத்துக்கு) விதையும், எனு முறைபோல்; (காரணமா)மென்னும் பீஜாங்குர நியாயம்போல (அனுதி

யேகருமத்துக்குச் சரீரமும் சரீரத்துக்குக் கருமமுங் காரணமானமையின் கருமச்செயல்வரக்கூடும்) ;என்றவரோ-என்று கூறியருளியவரோநீர்,(எ-று).

தாஷ்டாந்தம்-எஞ்சி நின்றதால்வருவித்தாம்

*மரமென்றுளதோ அன்றேவித்துங் காரணாத்மகமாக மரத்தினும் வித்தென்றுளதோ அன்றேமரமுங் காரணாத்மகமாக வித்தினும், அடங்கியொன்றாயிருத்தலின்-எகமாமரமும் வித்துமென்றார்.

---

காயமுந்தானும்பிறிதேற்கன்மமெவர்செய்ததென த்
தீயவுடற்கலதுகன்மச்செயறனக்கேதென்றவரோ (௰௩)

இ-ள்.

காயமும்-சரீரமும், தானும்—ஆன்மாவும், பிறிதேல்—வேறாகுமானால், கன்மம்—விதிநிஷேதமாகிய கன்மங்களை, எவர்செய்ததென—யாவர்செய்ததென்றருச்சுனன் கேட்க, கன்மச்செயல்—கன்மத்தைச்செய்யுஞ்செயலானது, *தீயவுடற்கலது-கொடிதாகியசரீரத்துக்கேயல்லாமல்,தனக்கேதென்றவரோ—ஆத்மாவுக்கில்லையென்றுகூறியருளியவரோநீர், (எ-று).

*சரீரத்துக்குச் சந்தனதித்தயில முதலிய வுஷ்ணோதக சீதோதகங்களால் ஸ்னானஞ்செய்வித்தல் திருமண், விபூதி, சந்தனாதிகள் சாற்றல் வஸ்திர பூஷணாதிகளாலலங்கரித்தல் பால், தயிர் நெய்யாதிகள்சேர்ந்தசுவையாகிய வுணவுகளைக் காலந்தவறாதுண்பித்தலாகிய விவைகளோடின்னும் வேண்டியபடியுபசரித்து வரினுமதற்குப் பதிலாயற்பமேனுஞ் சுகங்கடருதற்கேதுவாகாமற்றுக்கந்தருதற்கேயேதுவாயிருத்தலாற் சரீரங்கொடியதென்பது தோன்றத் தீயவு-லென்றார்.

---

படர்கருமமுடல்செய்யிற்பலமுறுவதார்க்கென வே
யடர்பலமுமுடற்கேயாமறிவார்க்கேதென்றவரோ (௰௪)



இ-ள்.

படர்கருமம்—(நித்திய, நைமித்திய, காமிய, பிராயச்சித்தமெனவிரிந்துள்ள)கருமங்களை, உடல்செய்யில்-சரீரஞ்செய்யுமானால், பலமுறுவது-கன்மபலம்வந்து பொருந்துவது, யார்க்கெனவே - எவர்க்கென்றருச் சுனன்கேட்க, அடர்பலமும்-கன்மத்தால் வந்துபொருந்திய புண்ணியபாவமாகியபலன்களும், உடற்கேயாம்-சரீரத்துக்கேயாகும், *அறிவார்க்கு - சாக்ஷிமாத்திரமாக அறிந்துகொண்டிரா நின்றவான்மாவுக்கு, ஏதென்றவரோ—இல்லையென்று கூறியருளியவரோ நீர், (எ-று).

*கடசராதிகளைச் செய்வதினால் வருமிலாபங்கள் அவைகளைச்செய்யுங்குலாலனையடையுமே யல்லாமல் குலாலனையுங் குலாலனாற் செய்யப்படுவதாகிய கடசராதிகளையும் வினோதமாகப் பார்த்துக்கொண்டிரா நின்றவர்களை யடையாதனபோல கன்மங்களைச்செய்வதினால் வரும்பிரயோசனங்கள் கன்மங்களைச் செய்வதாகிய சரீரத்தையடையுமேயல்லாமற் சரீரத்தையும் சரீரத்தாற் செய்யப்படுவதாகிய கன்மங்களையும் சாக்ஷிமாத்திரமாக அறிந்துகொண்டிரா நின்ற ஆன்மாவையடையாவென்பது சுருதியுத்தியனுபவங்களுக்கொத்த துணிபாதலால் அறிவார்க்கு ஏதென்றார்.

---

வெய்யவினையுடற்கென்றான்மெய்யிங்கேவிழவான் மா
வையமறநரகசொற்கமனுவிப்பதேதெனவே (௰௫)

இ-ள்.

(1) வெய்யவினை-கொடிதாகிய கன்மபலமானது, உடற்கென்றால்-சரீரத்துக்கென்று சொல்லுவீரானால், மெய்-சரீரமானது, இங்கே-இப்பூமியின்கண்ணே, விழ-மரணமாகிவீழ்ந்தபின்னர், ஆன்மா-(சேடித்திராநின்ற) ஆன்மாவானது, ஐயமற-சந்தேகமின்றி, நரகசொற்கமனுவிப்பது-நரக

சொற்கங்களை யனுபவிப்பதெனச்சில ர்கூறுவது, ஏதென வே-ஏதனாலென் றருச்சுனன்கேட்க,(எ-று) (1) வினை-எனக் காரியத்தைக் காரணமாகவுபசரித்தார்

---

அனுபவமேயில்லையதுவீணாரோபிதநிகழ்த்தி ற்
றனுகரணச்செயறனதாய்ச்சார்வதுபோலென்றவ ரோ
(௰௬)

இ-ள்.

அனுபவமேயில்லை-ஆன்மாவுக்கு நரகசொற்கானுபவமேயில் லை, அது-ஆன்மாவுக்கு நரக சொற்கானுபவமுண்டென்ப தை, நிகழ்த்தில்-சொல்லப்புகின், தனுகரணச்செயல்-தே கேந்திரியாதிகளின்செயலானது,தனதாய்-தனதுசெயலாக, சார்வதுபோல்-பொருந்துவதுபோல, வீணாரோபிதம்-விய ர்த்தமாகிய (1) அத்தியாசமேயாகும், என்றவரோ-என்று கூறியருளியவரோ நீர்,(எ-று)

(1) தனதபாவாதி கரணத்திற்றன தவபாசம் அத்தி யாசமாம்-அல்லது அதிட்டானசத்தையினும் விஷமசத் தையுடைய தினவபாசம் அத்தியாசமாம்-அல்லதுபிராந்தி ஞானத்திற்கு விஷயமாயுள்ள மித்தையாவஸ்து மற்றும் பிராந்தி ஞானமிவையின் பெயர் அத்தியாசமாம்-இவ்வத் தியாசங்களின் பேதங்களை அறியவிரும்பில் ஞானவித்தி யாசகர சொரூபராகிய கோவிலூர்ப்பொன்னம்பலசுவாமி கள் கைவல்லிய நவநீதத்திற்கியற்றிய தத்துவார்த்ததீப மென்னு முனைப்பிரசங்கத்திற்காண்க. அதிகரணம்-இடம்- அவபாசம்-தோற்றரவு-விஷமசத்தை - சமமல்லாத சத்தை,

---

மற்றுடலின்செய்கைதன்மேல்வருமயக்கமேதென வே
முற்றுணர்வொன்றில்லாதமோகமென்றுசொன்னவ ரோ
(௰௭)



இ-ள்.

மற்றுடலின்-(ஆன்மாவுக்)கன்னியமாயுள்ள சரீரத்தினது செய்கை-பருத்தலிளைத்தல் முதலிய செயல்கள்,தன்மேல் ஆத்மாவாகியதன்பேரில், வருமயக்கமேதெனவே-நான் ப ருத்தேனிளைத்தே னெனவராகின்ற அத்தியாசத்திற்கு(க் காரணம்) யாதென் றருச்சுனன்கேட்க, முற்றுணர்வு-பூர ணஞானமானது, ஒன்று-பொருந்துதல், இல்லாத-இன்றி ய, மோகமென்று-அஞ்ஞானமே (காரண) மென்று, சொ ன்னவரோ-கூறியருளியவரோநீர்-, (எ-று) இங்கே ஒன்று என்பது முதனிலைத்தொழிற்பெயர்.

---

அறிவுதேகந்தனக்கோவான்மாவிற்கோவென வே
பிறிவுசெயிலசித்துடலம்பிரமமறிவென்றவரோ (௰௮)

இ-ள்.

அறிவுதேகந்தனக்கோ-சித்திலக்கணம் சரீரத்துக்கோ-ஆ ன்மாவிற்கோ-ஆன்மாவினுக்கோ, எனவே-என் றருச்சுன ன்கேட்க, பிறிவுசெயில்- (சரீரவிலககணத்தையும் ஆன்ம விலக்கணத்தையும் வேறு) பிறித்து ப்பார்க்குமிடத்து, அசித்துடலம்-சரீரஞ்சடவிலக்கணத்தையுடையது, பிரம மறிவென்றவரோ - பிரமமே சித்தி லக்கணத்தை யுடைய தென்று கூறியருளியவரோ நீர், (எ-று).

---

தேகமசித்தாகிலிந்தச்செயல்வருவதேதென வே
யேகபரஞ்சோதியின்முன்னிருக்கையினாலென்றவ ரோ
(௰௯)

இ-ள்.

தேகமசித்தாகில்-சரீரஞ்சடமாயின்,இந்தச்செயல்வருவது (சரீரத்துக்குக் கன்மங்களைச்செய்வதான) இச்செயல்வரா நின்றது,ஏதெனவே-யாதினாலென் றருச்சுனன்கேட்க, ஏக

பரம்-ஒன்றாகவும் உயர்வாகவுமுள்ள, சோதியின்முன்-சைதன்னியத்தின் சன்னிதானம்பற்றி, இருக்கையினாலென்றவரோ-இருக்கின்றமையால் (தேகத்திற்குக்கன்மச் செயல் வரக்கூடு)மென்று கூறியருளியவரோநீர்—(எ-று)

---

இருக்கினுமசேதனத்துக்கிச்செயலுண்டோவென வே
யுருக்குபடாக்காந்தமுன்னிலூசிங்கரென்றவரோ (உ௰)

இ-ள்.

இருக்கினும்-(சைதன்னியத்தின் சன்னிதானம்பற்றி)யிருந்தாலும், அசேதனத்துக்கு-சடமாயுள்ள (சரீரத்துக்கு), இச்செயலுண்டோ-இக்கன்மாதிகளைச் செய்யத்தக்க செயலுண்டாகுமோ, எனவே-என்றருச்சுனன்கேட்க, உருக்குபடா-அக்கினியினாலுருக்கப்படாத, காந்தமுன்னில்-காந்த சன்னிதானத்திலுள்ள, ஊசிங்கர்-ஊசிக்குக்கம்பிக்குஞ்செயலுண்டாதல்போல, என்றவரோ-ஆன்ம சன்னிதானத்திராநின்ற சரீரத்திற்குக் கன்மச்செயல் வரக்கூடுமென்று கூறியருளியவரோநீர்-(எ-று.)

தாஷ்டாந்தம்-எஞ்சிநின்றதால் வருவித்தாம்

---

சொன்னசெயலுடற்கானாற்சுகதுக்கம்யார்க்கென வே
அன்னசுகதுக்கமுந்தானவ்வுடற்கேயென்றவரோ (உக)

இ-ள்.

சொன்னசெயல்-(தேவரீர்) கூறியகன்மச்செயலான்து, உடற்கானால்-சரீரத்துக்கென்று சொல்லுவீராகில், சுகதுக்கம்-(கன்மபலமாகிய) சுகதுக்கங்கள், யார்க்கெனவே-எவர்களுக்கென்றருச்சுனன்கேட்க, அன்னசுகதுக்கமும்-அத்தன்மையாகிய சுகதுக்கங்களும், அவ்வுடற்கேயென்றவரோ-முற்கூறியசரீரத்துக்கேயென்று கூறியருளியவரோநீர்-(எ-று) *தான்-அசை



சேதனமாமான்மாவைச்சேராததுக்கசு க
மோதுசடமாமுடலையுற்றிடுமோசொல்லுமென (உஉ)

இ-ள்.

சேதனமாமான்மாவை-சித்துருவமாகிய வான்மாவை, சேராததுக்கசுகம்-பொருந்தாத சுகதுக்கங்களானவை, ஓது (இழிவுடையதாகக்) கூறப்பட்ட, சடமாமுடலை-அசேதனமாயுள்ள சரீரத்தை, * உற்றிடுமோ - பொருந்துமோ, சொல்லுமென-(தேவரீர்) கூறியருள வேண்டுமென்றருச்சுனன்கேட்க,(எ-று).

* ஒருவன்வாளினால் மற்றொருவனைக்கொலை செய்யில் அக்கொலையினாலுண்டாகிய தண்டனையானது சேதனனாயுள்ள புருடனைச்சாருமேயன்றிய சேதனமாயுள்ள வாளினைச்சாராததுபோல ஆன்மாசரீரத்தாற் கன்மங்களைச் செய்யின் கன்மபலமாகிய சுக துக்கங்கள் சேதனமாயுள்ள ஆன்மாவைப்பொருந்துமேயன்றிய சேதனமாயுள்ள சரீரத்தைப்போருந்ாதெனும் தனதபிப்பிராயந்தோன்ற அருச்சுனன் சடமா முடலையுற்றிடுமோவென்றான்.

---

பூதமைந்தோடைந்துயிர்கள்புலன்கள்பத்துமனமுதனான்
கீதிருமெய்யிதின்மனத்துக்கின்பதுன்பமென்றவரோ
(உ௩)

இ.ள்.

(1) பூதமைந்தோடு-(பஞ்சபூதகாரியமாகிய) தூலசரீரத்தோடு, ஐந்துயிர்கள்-பஞ்சவாயுக்கள், புலன்கள்பத்து-தசேந்திரியங்கள், மனமுதனான்கு-மனமுதலிய அந்தக்கரணசதுட்டயம், ஈது-ஆகியவிவைகள், இருமெய்-இரண்டு சரீரங்களாகும், இதில்-இவ்விரண்டு சரீரங்களாகப் பொருந்தியதத்துவங்களில், மனதுக்கு-(தீபச்சுவாலையின் பரம்பரைபோல விருத்திருபபரிணாமத்தை யடையாநின்ற ஓர்

தத்துவமாகிய) மனதுக்கு, இன்பதுன்ப மென்றவரோ-சுகதுக்கங்களென்று கூறியருளியவரோ நீர், (எ-று).

பூதமைந்தோடைந்துயிர்கள், புலன்கள்பத்து-மனமுதனான்கு-ஈது-என்றதும்-இருமெய்-இதில்-என்றதும் - பன்மையிலொருமை மயங்கியவழூவமைதி-(1) காரியகாரணங்களையொற்றுமைப் படுத்தித் தூலசரீரத்தைப் பூதமைந்தென்றார்.

---

இந்தவிருவகைத்தனுவிற்கேதுவேதெனவின வ
முந்தியகாரணமதனான்மூன்றுதனுவென்றவரோ (உ௪)

இ-ள்.

இந்தவிருவகைத்தனுவிற்கு-இப்போதுசொல்லிய இரண்டுவகுப்பாகிய சரீரங்கட்கு, ஏதுவேதெனவினவ-மூலம்யாதென்றருச்சுனன்கேட்க, முந்திய-இவ்விரண்டிற்கு முதன்மையாயுள்ள, காரணம்-காரணமானது (அஞ்ஞானமாம்), அதனால்-இவ்விரண்டிற்கு மூலமாகிய யஞ்ஞானமொன்றிருத்தலால்,மூன்றுதனுவென்றவரோ - சரீரங்கள் மூன்றென்று கூறியருளியவரோநீர்-(எ-று).

---

மனமறியுந்துக்கசுகவரவென்றீரம்மனமு ம்
வினவிலசேதனமலவோவிரித்தெனக்குவிளம்புமென
(உ௫)

இ-ள்.

துக்கசுகவரவு-சுகதுக்கங்களின் வரவை, மனமறியுமென்றீர்-மனமனுபவிக்குமென்று தேவரீர்கூறினீர், அம்மனமும்-அந்தமனமும், வினவில்-விசாரிக்குமிடத்து, *அசேதனமலவோ-ஏனையதத்துவங்களைப் போற்சடமல்லவோ, விரித்து -(அம்மனம் சுகதுக்கங்களை அனுபவித்தற்கா[illegible] ஏதுவை) விஸ்தாரமாக, எனக்கு விளம்புமென-அடியேனுக்குக்கூறவேண்டுமென்றருச்சுனன் கேட்க, (எ-று)



அம்மனத்திலான்மாவபேதம்போற்றோன்றுதலா ல்
விம்முதுக்கசுகத்தைமனமேவுமென்றுசொன்னவ ரோ
(உ௬)

இ.ள்.

அம்மனத்தில் - அந்தமனதில், ஆன்மா - ஆத்மாவானது, *அபேதம்போல் - ஒன்றுபோல், தோன்றுதலால்-பிரதிபலித்துத்தோன்றுகின்றமையால், விம்முதுக்கசுகத்தை-மிகுதியாயுள்ள துக்கசுகங்களை, மனமேவுமென்று-மனதுபொருந்துமென்று, சொன்னவரோ-கூறியருளியவரோநீர்-(எ-று).

*ஆன்மாவுக்கும் மனதுக்கும் ஞானாஞ்ஞானகாலமாகியவெந்தக்காலத்திலும் ஏகத்துவ மின்றென்பது தோன்றஅபேதமாய்த்தோன்றுதலென்னாது அபேதம் போற்றோன்றுதலென்றார்.

---

அந்தமனோதுக்கசுகமதனிடத்துநில்லாம ல்
வந்திலங்குமான்மாவைமருவியதென்சொல்லுமென (உ௭)

இ.ள்.

அந்தமனோதுக்கசுகம் - அம்மனதுக்குரிய சுகதுக்கங்கள், அதனிடத்து - அம்மனதினிடமாகவே, நில்லாமல்-நிற்காமல், இலங்குமான்மாவை-(அறிவுமயமாய் விளங்கிக்கொண்டிராநின்ற ஆத்மாவை, வந்துமருவியதென்-வந்துபொருந்தியதெதுபோல, சொல்லுமென-தேவரீர் கூறவேண்டுமென்றருச்சுனன் கேட்க, (எ-று).

---

வெய்யகனலின்சூடுமேல்வைத்தசட்டியி னூ
டெய்யபுனலூடுவந்தங்கொன்றுதல்போலென்றவரோ (உ௮)

இ-ள்.

வெய்யகனலின்சூடு - கொடிதாகிய அக்கினியினுஷ்ணமானது, மேல்வைத்த-மேலேவைத்திருக்கப்பட்ட, சட்டியினூடு-சட்டியினுள், *உய் - அ - புனலூடு - விட்டிராநின்ற அந்தச்சலத்தின்கண், வந்தங்கு-வந்தவ்விடத்து, ஒன்றுதல்போல் - பொருந்துதலைப்போல, (மனதின் சுகதுக்கங்கள் மனேசம்பந்தமான ஆன்மாவைப்பொருந்தியது,) என்றவரோ-என்றுகூறியருளியவரோ நீர், (எ-று).

எஞ்சிய-தாஷடாந்தங்களை விரித்தாம்.

உய் - என்பது - தன்வினைபிறவினைகளுக்குப் பொதுவாயினும் ஈண்டுபிறவினையை யுணர்த்திநின்றது.

---

சித்தாகுமான்மாவுஞ்செடமாகுஞ்சித்தமுந் தா
ஞெத்தாங்கிரண்டுமொன்ருயுற்றவகைசாற்றுமென (உ௯)

இ-ள்.

சித்தாகுமான்மாவும்-சேதனமாயுள்ள ஆன்மாவும், செடமாகுஞ்சித்தமும் அசேதனமாயுள்ளமனதும், ஒத்தாங்கு-அபேதம்போல, இரண்டும்-உபயமும், ஒன்ருய்-ஏகமாய், உற்றவகை-பொருந்தியவிதம்,சாற்றுமென-(எங்ஙனம்)சொல்லுமென்றருச்சுனன்கேட்க, (எ-று) தான் அசை

---

வல்லிரும்புகனலுடனேமருவியதுபோன்மன மு
மொல்லையிலான்மாவுடனேயுற்றதுகாணென்றவரோ (௩௰)

இ-ள்.

வல்-வலுமைபொருந்திய, இரும்பு-(தூலமாகவும் அப்பிரகாசமாகவுமிராநின்ற) அயமானது, கனலுடனே-(சூட்சுமமாகவும் பிரகாசமாகவுமுள்ள) அக்கினியுடனே, மருவியதுபோல-(ஏகமாக)ப்பொருந்தியதுபோல, மனமும்-(தூல



மாகவும் அப்பிரகாசமாகவுமிராநின்ற) மனதும், ஆன்மாவுடனே-(சூட்சுமமாகவும்பிரகாசமாகவுமுள்ள) ஆத்மாவுடனே, ஒல்லையில்-அனுதியில், உற்றது-(ஒன்றுபோற்)பொருந்தியது, காணென்றவரோ-நீயறிவாயாகவென்று கூறியருளியவரோ நீர், (எ-று).

---

உற்றதெதனுலெனவேயுள்ளமவிவேகமுற ப்
பற்றியதன்மேலுமதன்பண்புவந்ததென்றவரோ (௩௧)

இ-ள்.

உற்றது-(மனதுக்குரிய சுகதுக்க மாத்மாவைவந்து) பொருந்தியது, எதனுலெனவே - யாதினுலென்றருச்சுனன் கேட்க, உள்ளம்-மனமானது, அவிவேகமுற-விவேகசூனியத்தையடைந்தமையால், பற்றிய - அம்மனத்தினைப் பொருந்திய, தன்மேலும்-(ஆத்மாவாகிய) தன்பேரிலும், அதன் பண்புவந்ததென்றவரோ அம்மனதுக்குரிய சுகதுக்கங்கள் வந்து பொருந்தியதென்று கூறியருளியவரோ நீர், (எ-று).

---

அடுத்தகுணம்போமோபின்னுன்மாவைவிட்டென வே
யெடுத்தசெம்பூநிறம்படிகத்தேறுதல்போலென்றவரோ (௩௨)

இ-ள்.

அடுத்தகுணம் - அனுதியாகவே பொருந்தியிராநின்ற சுகதுக்கங்களாகிய குணங்கள், பின் - பின்பொருகாலத்தில், ஆன்மாவைவிட்டு - ஆன்மாவைப்பிரிந்து, போமோ-நீங்குமோ,எனவே-என்றருச்சுனன்கேட்க, எடுத்த-பற்றியுள்ள, செம்பூநிறம்-சிவந்தபுட்பத்தினிறமானது, படிகத்தேறுதல்போல்-பளிங்குக் கண்ணுடியிற் (ருேற்றமாத்திரமாக) வேறித்தோன்றுதல்போல, (ஆத்மாவினிடத்திலும் மனதின் குணங்கள் அத்தியாசத்தாற் ருேன்றுகின்றமையின் அவை

யெதார்த்தமல்ல) என்றவரோ-என்று கூறியருளியவரோ நீர், (எ-று).

☞ எடுத்த-என்பதற்கு-இங்கே-பற்றிய-தாங்கிய-தரித்த-எனுமூன்றும்-பொருந்தும்-தாஷ்டாந்தமெஞ்சி நின்றதால் வரிவித்தாம்-

(1) அடுத்தகுணமான் மாவைவிட்டு நீங்குமோவென்னுங் கடாவிற்கு புட்பத்தின் செந்நிறமானது படிகத்திற்றோன்றினும் எதார்த்தத்தி லில்லாததுபோல மனதின் குணங்களாத்மாவினிடத்துத் தோன்றினும் எதார்த்தத்திலில்லாதிருக்க அவைகளாத்மாவினிடத் திருப்பதாகக்கொண்டு) நீங்குமென்றேனும் அல்லது நீங்காவென்றேனும் விடைகூறலசங்கதமாகுமாதலின் அக்குணங்களாத்மாவினிடத்தத்தியாசத்தாற் றோன்றுகிறதென்னும் பொருடோன்றச் செம்பூநிறம்படிகத்தேறுதல் போலென்றார்-

---

சுத்தபடிகம்போற்சொரூபமாய்த்தானிருக் ... ... க
மெத்தவுமாசாமலின்மேவியதென்சொல்லுமென (௩௩)

இ-ள்.

சுத்தபடிகம்போல்-பரிசுத்தமாகியபளிங்கினைப்போல, சொரூபமாய்த்தானிருக்க-சச்சிதானந்த சொரூபமாகவே யாத்மாவிருக்க, மெத்தவும்-மிகவும், ஆசாமலினம் ஆசையாகிய களங்கம், மேவியதென்-(ஆத்மாவினிடத்திற்) பொருந்தியதெதனாலே, சொல்லுமென (அதனைத்தேவரீர்) கூறியருளவேண்டுமென்றருச்சுனன்கேட்க, (எ-று).

---

அனுதியாம்வாசனையாலடைந்ததாசாமலின ...
மனோபந்தமிருக்கின்முத்திவாராதென்றுரைத்தவரோ
(௩௪



இ-ள்.

அனுதியாம்வாசனையால்-அனுதியாயுள்ள கரணவாசனையால், ஆசாமலினம்-ஆசாபாசமாகியகளங்கம், அடைந்தது-வந்துபொருந்தியதாம், மனோபந்தம்-(அதுவே) மனதுக்குப் பந்தமுமாகும், இருக்கில்-அப்பந்தமிருக்குமானால், முத்திவாராதென்று-மோக்ஷஞ்சித்திக்கமாட்டாதென்று, உரைத்தவரோ-கூறியருளியவரோநீர்-(எ-று).

---

பந்தமெதுமுத்தியெதுபகுத்துரைக்கவேண்டுமென்ற ன்
சிந்தைதெளியவென்றுதிருத்தாளினைவணங்க (௩௫)

இ-ள்.

பந்தமெது-பந்தமென்பதுயாது, முத்தியெது-மோக்ஷமென்பதுயாது, என்றன்சிந்தை-எனதுசித்தமானது, தெளிய, $(சந்தேகவிபரீதங்களின்றித்) தெளிவையடையும் பொட்டு, பகுத்து-வேறுபிறித்து, உரைக்கவேண்டுமென்று-கூறியருளவேண்டுமென்று, திருத்தாளினை-சிறப்புப்பொருந்தியவுபயதிருவடிகளையும், வணங்க-அருச்சுனன்நமஸ்கரிக்க-(எ-று).

$ நாமமுதலியவற்றாற் பிறித்தறியாமற் பொருளுண்மைமாத்திரையாக நிருவிகற்பமாயறிந்த பொருளையிஃதி யாதோவெனவொன்றிற்றுணிவு பெறுதாராய்தல் சந்தேகம்-அதனையதனோடொப்புமையுடைய வேறுபொருளாக மயங்கி நிச்சயித்தல் விபரீதம்-

---

தகாதிதானெனவேசேரபிமானங்கள்பந் த
ாகாதமானம்விடிலரியமுத்தியென்றவரோ (௩௬)

இ-ள்.

தேகாதி-தேகேந்திரியாதிகளில், தானெனவே-தானென்பதாக, சேரபிமானங்கள்-பொருந்தாநின்றஅபிமானங்களே, பந்தம்-பந்தமாகும், ஆகாத-சுருதிகட்கும் பெரியோர்கட்குமங்கீகாரமில்லாத, மானம்விடில்-அபிமானத்தைவிட்டுவிடில், அரிய-அதுவே யபக்குவர்களாலடைதற் கருமையாகிய, முத்தியென்றவரோ-மோக்ஷமென்று கூறியருளியவரோநீர், (எ-று).

---

அபிமானம்வரும்வகையுமாங்கதுதான்றீர்வகையு ந்
தபியாமனானறியத்தயவாகக்கூறுமென (௩௭)

இ-ள்.

அபிமானம் வரும்வகையும்-அபிமானம்வந்து பொருந்துகின்றவிதமும், ஆங்கு-அதுபோல, அதுதான்றீர்வகையும்-அவ்வபிமானம் நீங்குகின்றவிதமும், தபியாமல்-தாபமுறாமல், நானறிய-அடியேனறியும்பொருட்டு, தயவாக-கிருபையாக, கூறுமென-அனுக்கிரகம்பண்ணவேண்டுமென் றருச்சுனன்கேட்க, (எ-று).

---

மறந்திடுமஞ்ஞானத்தான்மானம்வந்ததஞ்ஞா ன
மிறந்துவிடின்மானமும்போமென்னவுரைசெய்தவரோ
(௩௮)

இ-ள்.

மறந்திடும்- (ஆத்மாவாகிய தன்னை) மறத்தற் கேதுவாகிய அஞ்ஞானத்தால்-அஞ்ஞானத்தினால், மானம்வந்தது அபிமானம் வந்து பொருந்தியது, அஞ்ஞானமிறந்துவிடில்



அவ்வஞ்ஞானப்-நாசமுறுமாயின், மானமும்போமென்ன-அவ்வபிமானமும் நீங்கிவிடுமென்று, உரைசெய்தவரோ-கூறியருளியவரோநீர், (எ-று).

---

அந்தமுறையஞ்ஞானமணுகுவதும்போவதுவு ஞ்
சந்தயமில்லாதறியத்தயவாகக்கூறுமென (௩௯)

இ-ள்.

அந்தமுறை-முற்கூறியகிரமமாகவே, அஞ்ஞானமணுகுவதும்-அஞ்ஞானம்வருதற்கான ஏதுவையும், போவதுவும்-நீங்குதற்கானவேதுவையும், சந்தயமில்லாதறிய-ஐயமின்றியானறியும்பொருட்டு, தயைவாக-கிருபையோடு, கூறுமென-சொல்லவேண்டுமென்றருச்சுனன்கேட்க-(எ-று). சந்தேகம் சந்தயமெனமரீயது.

---

அஞ்ஞானம்வந்ததனாதியதுசொல்வதல் ல
மெய்ஞ்ஞானத்தாலேவிடுமென்றுரைத்தவரோ (௪௰)

இ-ள்.

அஞ்ஞானம் வந்தது-அஞ்ஞானமொருகாரணத்தால் வந்ததெனச், சொல்வதல்ல-சொல்லத்தக்கதல்ல, அது-அவ்வஞ்ஞானமானது, அனாதி-அனாதியாயுள்ளதேயாகும்,*மெய்ஞ்ஞானத்தாலே-தத்துவஞானத்தால், விடுமென்றுரைத்தவரோ-நீங்கிவிடுமென்று கூறியருளியவரோநீர்,(எ-று).

(1) கடத்தினது பிராகபாவமனாதியாயிருக்கினுங் குலாலதண்டக்கிரியையாலதற்கு நாசமுண்டாதல்போல அஞ்ஞானமனாதியாயிருக்கினு மதற்கு ஞானத்தால் நாசமுண்டாதல் சித்தமாதலால் மெய்ஞ்ஞானத்தாலே விடுமென்றார்.

---

இரவியெதிரடுத்துவந்தவிருட்போலவஞ்ஞான ம்
வரவிதியோசோதிதன்பால்வந்தவகையேதெனவே (௪௧)

இ-ள்.

இரவியெதிரடுத்துவந்த - சூரியன்முன்பாக மருங்கிவந்த, இருட்போல-அந்தகாரம்போல, சோதிதன்பால்-சுயம்பிரகாசமாகிய என்னிடத்து, அஞ்ஞானம்வரவிதியோ-அஞ்ஞானம்வருதற்கு நியாயமுளதோ, வந்தவகை-(வருதற்கு நியாயமில்லாதிருந்தும் நானறியேனென்னு மனுபவந்தோன்ற) வந்திராநின்றவிதம், ஏதெனவே-ஏதனாலென்றருச்சுனன்கேட்க-(எ-று).

---

அந்தஅறிவுவந்தாலஞ்ஞானமில்லையப்பா ற்
சந்ததமுமானந்தசாகரநீயென்றவரோ (சஉ)

இ-ள்.

(1) அந்தஅறிவுவந்தால் - நான்சுயம் பிரகாசமென்னும் ஞானம் உனக்குதயமானால், அஞ்ஞானமில்லை-அஞ்ஞானம் உன்னிடத்தில்லாததாகும், அப்பால்-அதற்குப்பின், சந்ததமும்-சதாகாலமும், நீஆனந்தசாகரம் - நீபிரமானந்த சமுத்திரமாகவேயிருப்பாய், என்றவரோ-என்று கூறியருளியவரோநீர்-(எ-று).

(1) பிரகாசமாயுள்ளஆத்மாவினிடத்தப் பிரகாசமாகிய வஞ்ஞானம் வந்திருப்பதெதனாலென்னுங்கடாவிற்கு அந்த அறிவுவந்தாலஞ்ஞானமில்லையென்றமையால்-நான்சுயம்பிரகாசமென்னும் †அதிஷ்டான ஞானமுதயமாதற்குப் பூர்வம் பிரகாசமாகிய சந்திரனிடத்தப் பிரகாசமாகிய களங்கமனாதியாகவேயிருத்தல்போல பிரகாசமாகிய ஆத்மாவினிடத்தப் பிரகாசமாகிய வஞ்ஞானமனாதியாகவேயுள்ளதன்றியிடையில் யாதானுமோர் காரணத்தால் வந்ததன்றென்பதேவிடையென வூகித்துணர்க.

†யாதொன்று நிருவிகாரமாகவும் அவித்தையாற் செய்யப்பட்ட கற்பிதகாரியங்கட்காசிரயமாகவுமிருக்கிறதோ-அது அதிஷ்டானமாகும்-திருஷ்டாந்தம்-கற்பிதசற்பத்துக்கு-இரச்சு. அதிஷ்டானம்.



---

வேதாந்தத்தாற்குருவான்மெய்ஞ்ஞானம்வந்தவுட ன்
றீதானதுக்கசுகந்தீராததேதெனவே (சங)

இ-ள்.

வேதாந்தத்தால் - வேதாந்தசாஸ்திர சிரவணத்தினாலும், குருவால் - ஆசாரியருபதேசத்தினாலும், மெய்ஞ்ஞானம்-தத்துவஞானம், வந்தவுடன்-உதயமான உத்தரக்ஷணமே, தீதானதுக்கசுகம் - கொடிதாகியசுகதுக்கங்கள், தீராததேதெனவே-நீங்காததெதனாலென்றருச்சுனன்கேட்க,(எ-று).

---

பற்றறுமோதுக்கசுகம்பரோக்ஷஞானத்தா ... லே
யற்றமாமவ்விரண்டுமபரோக்ஷத்தென்றவரோ (சச)

இ-ள்.

பரோக்ஷஞானத்தாலே-பரோக்ஷஞானத்தால், துக்கசுகம்-சுகதுக்கங்களாகிய, பற்றறுமோ - பற்றுக் கனசமாமோ (ஆகாமற்றெதனாசமாமெனின்), அவ்விரண்டும்-அவ்விரண்டுபற்றுக்களும், அபரோக்ஷத்து அபரோக்ஷ ஞானத்தால், அற்றமாம்-நாசமாகும், என்றவரோ-என்றுகூறியருளியவரோநீர், (எ-று).

*ஆல் என்னும் கருவிப்பொருளுணர்த்து மூன்றனுருபு பிரிக்கப்பட்டது.

பரோக்ஷமபரோக்ஷமெதுபகுத்துரைக்கவேண்டுமென்றன்
திரோதமாம்புத்திநன்றாய்த்தெளிவுபெறுமாறெனவே (௪௫)

இ-ள்.

பரோக்ஷமபரோக்ஷமெது - பரோக்ஷ ஞானமென்பதியாது அபரோக்ஷஞானமென்பதியாது, என்றன்-எனது, திரோதமாம்புத்தி-மயக்கம்பொருந்தியபுத்தியானது, நன்றாய்-நன்றாக, தெளிவுபெறுமாறு - தெளிவையடையும் பொருட்டு பகுத்துரைக்க வேண்டும்-வேறுபிரித்துக் கூறவேண்டும், எனவே-என்றருச்சுனன்கேட்க, (எ-று.)

———

பகர்ந்தசத்தஞானம்பரோக்ஷமனுபவத் தா
லகம்பிரமமெனுஞானமபரோக்ஷமென்றவரோ (௪௬)

இ-ள்.

பகர்ந்த (அசத்தாவரணவிரோதியெனச்) சொல்லிய, சத்த ஞானம்-சாஸ்திர ஜன்ய ஞானமானது, பரோக்ஷம்-பரோக்ஷஞானமாகும், அனுபவத்தால்-சுவானுபவத்தால், அகம்பிரமமெனு ஞானம்-நான் பிரமமென்னும் ஞானமானது, அபரோக்ஷமென்றவரோ-அபரோக்ஷஞானமென்று கூறியருளியவரோநீர், (எ-று)

———

தான்பிரமமென்றறிந்துந்தனுவைத்தானென்றபுத்
யேன்போகவில்லையதையெனக்கறியப்புகலுமென (௪[illegible]

இ-ள்.

தான்பிரமமென்றறிந்தும்-அகம்பிரமமென்றறிந்தும், த[illegible]வை-தேகேந்திரியாதிகளை, தானென்றபுத்தி-அகமென்னு[illegible] புத்தியானது,ஏன்போகவில்லை-எதனானீங்கவில்லை,அதை



(நீங்காதிருத்தற்குள்ள) அக்காரணத்தை, எனக்கறிய-அடியேனுக்கறியும்பொருட்டு, புகலுமென-கூறியருளவேண்டுமென்றருச்சுனன்கேட்க, (எ-று).

———

கேள்வியினான்மனனத்தாற்கிளர்ந்தயோகங்களி னா
லாள்பிரமத்தனுபவம்வந்ததுதீருமென்றவரோ (௪௮)

இ-ள்.

*கேள்வியினால் - சாஸ்திரசிரவணத்தினாலும், †மனனத்தால் - அர்த்தமனனத்தினாலும், ‡கிளர்ந்த §யோகங்களினால்-விளங்காநின்றதியானயோகங்களினாலும், ||ஆள்-முயற்சித் (தடையத்தக்க) பிரமத்தனுபவம்வந்து-பிரமானுபவமுதயமாகியபின், அது-அத்தேகோகமென்னும் புத்தியானது, தீருமென்றவரோ - நீங்குமென்றுகூறியருளியவரோநீர், (எ-று).

||ஆள்-என்பது-முயற்சி

* சற்சாஸ்திரார்த்தங்களைக் குருமுன்னிலையிற் சடுவிதலிங்கதாற் பரியமாகச்சிரவணஞ் செய்தலைக்கேள்வியென்றார்.

†சிரவணப்பொருளைத் தானாயினும் தனக்கொத்த சாதுசங்கங்களோடாயினுஞ் சுருதிதாற்பரியமாகத் தர்க்கயுத்தியனுமானங்களோடு சிந்தித்தலைமனனமென்றார்.

§[illegible]னனத்தா னிச்சயித்த பொருளையதுவேநான் நானேய[illegible]வெனத்தயிலதாரைபோல நிரந்தரம் நெடுங்காலம் நே[illegible]த்தோடுசசாதிவிருத்திப்பிரவாக ரூபமாகத்தியானிக்கின றசிதித்தியாசனத்தை யோகமென்றார்

‡ தியானபரிபாகமாகிய சமாதியில் தியானவஸ்துவாகிய பரமாத்மாதன் மயமாகவிளங்குதலின் கிளர்ந்தயோகமென்றார்

---

ஆதியாஞ்சிற்சொரூபமாகாததானினிமே ... ற்
சோதிமனனுதியினற்சொரூபமாமோவெனவே (௪௯)

இ-ள்.

ஆதியாம்-முதன்மையாகிய, சிற்சொரூபம்-சின்மாத்திரசொரூபம, ஆகாததான்-(முன்னமே) ஆகாதிருக்கப்பட்டஆன்மா, இனிமேல்-பின்னர், சோதிமனனுதியினல், விசாரிகின்ற-மனனமுதலியவைகளால், சொரூபமாமோ - (சின்மாத்திரசொரூபமாகுமோ, எனவே-எனஅருச்சுனன் கேட்க, (எ-று).

---

எப்போதுஞ்சின்மயந்தானெனன் மறந்துதேடுவ து
செப்புமிடற்றணியிருக்கத்தேடுதல்போலென்றவ ரோ
(௫௰)

இ-ள்.

எப்போதும்-எந்தக்காலத்தும், சின்மயம்-சின்மாத்திரசொரூபம், தானெனல்-தானென்பதை, மறந்து-அயர்ச்சித்து, தேடுவது-(அடையவேண்டுமெனத்)தேடுகின்றது, செப்புமிடற்று-சொல்லாகின்றகண்டத்து, *அணியிருக்க - (கண்டாபரணமிருக்கும்போது, தேடுதல்போலென் றவரோ-(கண்டாபரணமெங்குற்றதோவென) த்தேடுகிறதற்குச் சமானமாகுமென்று கூறியருளியவரோநீர், (எ-று).

*அணியென்பது-இடுவன, தொடுவன, கட்டுவன, கவிப்பன, முதலிய ஆபரணங்கள் பலவற்றிற்கும் பொதுப்பெயர்



தேடியபின்றேகபுத்திதீர்ந்துபோய்ச்சிற்சொருப ங்
கூடுவனேயானென்குறைதீரச்சொல்லுமென (௫௧)

இ-ள்.

தேடியபின்-மனனுதிகளாற்றேடியபிற்பாடு, தேகபுத்திதீர்ந்துபோய்-தேகோகமென்னும் புத்தியானது கெட்டொழிந்து, சிற்சொருபம்-சின்மாத்திரசொரூபத்தை, (1) கூடுவனேயான் - யானடைவனே, என்குறைதீர - எனது குறைவானது நீங்கும்படி, சொல்லுமென-கூறியருளவேண்டுமென்றருச்சுனன்கேட்க, (எ-று).

(1) கூடுவன்-இதில் அன்விகுதிதன்மையிடத்துவந்தது

---

வந்தவுடல்வேருயும்வாசனையாற்றனெனலா ற்
சந்தயமென்றற்சொருபந்தானுதற்கென்றவரோ (௫௨)

இ-ள்.

வந்தவுடல்-(கன்மத்துக்)கேதுவாக வந்திராநின்ற சரீரமானது, வேருயும்-அன்னியமாயிருந்தும், வாசனையாற்-(பழக்கத்தாற்பொருந்திய)மலினவாசனையினுல், தானெனலால்-(அதனைத்)தானென்று கூறுதலால், தற்சொருபந்தானுதற்கு-தன்னுடையசொரூபந்தானுதற்கு, சந்தயமென்-ஐயமாதிருக்கின்றது, என்றவரோ-என்று கூறியருளியவரோநீர், (எ-று). சந்தேகம் சந்தயமெனமரீயது.

---

தனுவைத்தானெனும்பிரமைசத்தஞானத்தில ரு
‡னுபமெய்ஞ்ஞானத்தாலறும்வகையேதுநாயுமென
(௫௩)

இ-ள்.

தனுவைத்தானெனும்பிரமை - தேகத்தைத்தானென்னும் பிராந்தியானது, சத்தஞானத்திலரு து - சாஸ்திரஜன்னிய

மாகிய பரோக்ஷஞானத்தானீங்காமல், அனுபவமெய்ஞ்ஞானத்தால்-எதார்த்தானுபவமாகிய அபரோக்ஷஞானத்தால், அறும்வகையேது-நீங்குகின்றவிதமெங்ஙனம், உரையுமென-கூறவேண்டுமென்றருச்சுனன்கேட்க, (எ-று).

---

விளக்குவிளக்கெனுமதனல்வெய்யவிருள்போய்விடுமோ
துளக்கமிலாவிளக்கேற்றிற்றொலேயுமிருளென்றவரோ (௫௪)

இ-ள்.

*விளக்கு விளக்கெனுமதனல்-தீபந் தீபமெனப் பலதரஞ்சொல்லும் வசனத்தால், (1) வெய்யவிருள்போய்விடுமோ-கொடிதாகிய அந்தகாரம் நீங்குமோ (நீங்காது), (2) துளக்கமிலாவிளக்கேற்றில் - சலனமில்லாத தீபத்தை யேற்றினல், தொலேயுமிருள்-அந்தகாரம் நீங்கிவிடும், (அதுபோல பரோக்ஷ ஞானத்தாற் றேககானெனும் பிராந்தி நீங்குமா நீங்காது அபரோக்ஷஞானமுதயமாகில் நீங்கும்) என்றவரோ-என்று கூறியருளியவரோ நீர், (எ-று.) தாஷ்டாந்தமெஞ்சிநின்றமையின் விரித்தாம்.

*விளக்கு விளக்கு என்றது பன்மைப்பொருளில் வந்த அடுக்கு.

தேகோகமென்னும் பிராந்திக்கேதுவாகிய அஞ்ஞானத்தி னசத்தாவரண மபானுவரணமென்னு மிரண்டமிசங்களிலசத்தாவரணத்தை மாத்திரம் நிவிர்த்திக்குஞ்சத்தி பரோக்ஷ ஞானத்திற்குள்ளதேயன்றி யபானுவரணத்தையும் நிவிர்த்திக்குஞ் சத்தியின்மையாற் பரோக்ஷஞானத்தாற்றேகோகப் பிராந்தி நிவிர்த்தியாகாதென்பதும் - அபரோக்ஷ ஞானத்திற்கபானுவரணத்தையும் நிவிர்த்திக்குஞ் சத்தியுள்ளதாகலின் அபரோக்ஷ ஞானத்தாற் றேகோகப் பிராந்தியுங்காரணமாகிய வஞ்ஞானத்தோடு நிவிர்த்தியாகுமென்பதும் - தோன்றத் திருட்டாந்தரமாயுள்ள இருள்



விளக்கு விளக்கெனும் வசனத்தா னீங்காதெனவும்-துளக்கமிலா விளக்கேற்றினனீங்குமெனவுங் கூறினரென்க.

(1) எஞ்சியதாட்டாந்தரத்திலுள்ள அஞ்ஞானம் சனன மரண சம்சார துக்கத்திற்கேதுவாக ஆத்மசொரூபத்தை மறைத்திருத்தலின் மிகவுங்கொடியதென்பது தோன்றத் திருட்டாந்தரத்திலுள்ள இருளேவெய்ய விருளென்றார்.

(2) எஞ்சியவுவமேயப் பொருளாயுள்ளஞானம் திடாபரோக்ஷஞானமானமையின் அஃது சலனமின்றிய ஞானமாமென்பதுதோன்ற உவமானப்பொருளாயுள்ள தீபத்தைத் துளக்கமிலா விளக்கென்றார்.

---

நெடுங்காலமான்மாவை நீங்காதவஞ்ஞான ... ... ம்
விடுங்காலமென்னுளோ மெய்ஞ்ஞானத்தாலெனவே (௫௫)

இ-ள்.

நெடுங்காலம்-நீண்டகாலமாக, ஆன்மாவைநீங்காத - ஆன்மாவைவிட்டு நீங்காதிருக்கப்பட்ட, அஞ்ஞானம்-அஞ்ஞானமானது, மெய்ஞ்ஞானத்தால்-உண்மைஞானத்தால், விடுங்காலமெந்நாளோ - நீங்குகின்றகாலமெந்தக்காலமோ, எனவே-என்றருச்சுனன்கேட்க, (எ-று).

---

அந்தகாரங்குகையிலாயிரநாளிருந்தாலு ... ஞ்
செந்தீபங்கண்டவுடன்றீர்வதுபோலென்றவரோ (௫௬)

இ-ள்.

அந்தகாரம்-இருளானது, குகையில்-மலேக்குகையில், ஆயிரநாளிருந்தாலும்-அனேககாலமாகவிருக்கினும், செந்தீபங்கண்டவுடன்-செவ்விதாகியதீபத்தைக்கண்ட அளவிலே, தீர்வதுபோல்-நீங்குகின்றதுபோல (அளவில்காலமான்மாவைவிட்டஞ் ஞானனீங்காதிருக்கினும் ஞானமுதயமாகிய அளவிலேநீங்கிவிடும்), என்றவரோ-என்றுகூறியருளியவ

ரோ நீர், (எ-று). தாஷ்டாந்தங்கள் எஞ்சிநின்றமையால் விரித்தாம்.

---

கருமயோகந்தவமேகாரணமாய்நீங்கா ... ... ம
லருமையாய்ஞானம்வந்தோ அஞ்ஞானம்போமெனவே (௫எ)

இ-ள்.

கருமம்-யாகாதிகருமங்கள், யோகம்-பிராணபந்தனாதியோகமுதலிய, தவமேகாரணமாய்-காயக்கிலேசாதிதவங்களேகாரணமாக, நீங்காமல்-நிவிர்த்தியாகாமல், அருமையாய் ஞானம்வந்தோ - அடைதற்கருமையாயுள்ள ஞானமுதயமானபின்போ, அஞ்ஞானம்-அஞ்ஞானமானது, போமெனவே-நிவிர்த்தியாகுமென்றருச்சுனன்கேட்க, (எ-று).

---

குத்துவெட்டும்படைகளினாற்கூடுமோவிருடூரக் க
உத்தமமாம்ரவியுதித்தாலோடுமிருளென்றவரோ (௫அ)

இ-ள்.

குத்துவெட்டும்படைகளினாற்-குத்துகிறதாயும் வெட்டுகிறதாயுமுள்ள ஆயுதசாலங்களால், இருடூரக்க-அந்தகாரத்தைப்போக்குதற்கு, கூடுமோ-ஆகுமோ, (ஆகாது) (1)உத்தமமாம் ரவியுதித்தால்-உத்தமமான சூரியனுதயமாகில், ஓடுமிருள் - அந்தகாரம்நீங்கிவிடும்(அதுபோலக்கன்மாதி யோகதவங்களா லஞ்ஞான நிவிர்த்தியாகுமோ ஆகாது ஞானமுதயமாகில் நிவிர்த்தியாகும்), என்றவரோ-என்று கூறியருளியவரோ நீர், (எ-று),

எஞ்சியதாஷ்டாந்தங்களைவிரித்தாம்,

(1) எஞ்சியதாட்டாந்தரமாயுள்ள அபரோக்ஷஞானம் சருவதுக்கநிவிர்த்தி-பரமானந்தப்பிராப்த்திக் கேதுவானமையின் மிகவுமுத்தமமாயுள்ளதெனும்பொருடோன்றத்திருட்டாந்தரமாயுள்ள சூரியனை-உத்தமமாம் ரவியென்றார்.

---

அஞ்ஞானவிருடூரக்கவறியாதநல்லகன் ... ... ம
மெய்ஞ்ஞானந்தனைப்பலிக்கும்விதமெவ்வாறெனவினவ (௫௯)

இ-ள்.

அஞ்ஞானவிருடூரக்க-அஞ்ஞானமாகிய வந்தகாரத்தைப் போக்குதற்கு, அறியாத-சாமர்த்திய மில்லாத, நல்லகன்மம்-சற்கருமங்கட்கு, மெய்ஞ்ஞானந்தனை-தத்துவஞானத்தை, *பலிக்கும்விதம்-உதிப்பிக்குஞ்செயல், எவ்வாறெனவினவ-எங்ஙனங்கூடுமென்றருச்சுனன்கேட்க, (எ-று).

*பலிக்கும்-என்பதில் பிரவினையையுணர்த்தும் பிவ்விகுதிதொக்கது,'பாலிக்கும்-என்றதைப்பலிக்கும் எனக்குறுக்கல்விகாரமாகக்கொள்ளினுமமையும்-

---

கருமமிருவகையாங்காமியநிட்காமியமெ ... ... ன்
றிருவகையினிட்காமமமேதுகாணென்றவரோ (௬௰)

இ-ள்.

காமியநிட்காமியமென்று-காமியகருமமென்றும்நிட்காமியகருமமென்றும், கருமமிருவகையாம் - கருமமிரண்டுவகையாகும், இருவகையில் - இரண்டுபிரிவாகிய கருமங்களில், நிட்காமம்-நிட்காமியகன்மமானது, ஏது-ஞானத்தையுதிப்பித்தற்குக்காரணமாகும்,காணென்றவரோ-நீயறிவாயாகவென்றுகூறியருளியவரோநீர், (எ-று).

---

கருமமேகாரணமாய்க்கட்டறைத்தீரிவ்வுல ... கை
யொருவும்வகையையெனக்கோதென்றடிபணிய (௬௧)

இ ள்.

கருமமேகாரணமாய்-நிட்காமியகருமமே (ஞானத்தையு ப்பித்தற்குக்) காரணமென்று, கட்டுரைத்தீர்-உருதிபெற ருளிச்செய்தீர் (அதுபொருந்தும்) (1) இவ்வுலகை-பிரத் யக்ஷமாகிய விவ்வுலகத்தினின்றும், ஒருவும்வகையை-யா னீங்குகின்றவிதத்தை, எனக்கு-அடியேனுக்கு, ஓதென்ற டிபணிய-கூறியருளவேண்டுமென்று திருவடியிலருச்சுன ன் நமஸ்கரிக்க, (எ-று).

(1) உலகின்-என்றபாலதாகிய ஐந்தாம்வேற்றுமையுருபு உலகையென் இரண்டாவதனுருபாகமயங்கிற்று.

---

இந்திரஜாலம்போலவிவ்வுலகைநம்மிடத்தி ற்
றந்திரமாய்த்தோற்றுவித்தோஞ்சத்தியமலவென்றவரோ
(௬உ)

இ ள்.

இந்திரஜாலம் போல-அற்புதங்களைக்காட்டு மிந்திரஜாலவி த்தையைப்போல,இவ்வுலகை-இந்தப்பிரபஞ்சத்தை,நம்மி டத்தில் - பிரம சொரூபமாகிய நம்மிடத்தில், தந்திரமாய்- அலங்காரமாக,தோற்றுவித்தோம்-தோன்றும்படி செய்வி த்தோம்,(1)சத்தியமலவென்றவரோ - இதுஎதார்த்தமல் லவென்று கூறியருளியவரோநீர், (எ-று).

(1) இந்திரஜாலத்தாற்றோன்றிய யானை முதலிய மிரு கங்கடன்னைச்சூழ்ந்ததாகக் கண்டச்சமுற்றிவை கட்க படாது நீங்கவேண்டுமென்றெண்ணிய பிராந்தனிவைக ந்திரஜாலத்தாற்றோன்றிய பொய் மிருகங்களென்றறிதலே அவைகளினின்றும் நீங்கியதாகுமெனல்போல்மாயையா றோன்றிய விவ்வுலகைமித்தையென்றறிதலே யிவ்வுலகின ன்றுநீங்கியதாகுமென்பதுதோன்றச்சத்தியமலவென்று



த்தையெனுஞ்சகத்துநின்பால்விளங்குமோவெனவினவ
சுத்திதனிலேரசிதந்தோன்றுதல்போலென்றவரோ (௬௩)

இ ள்.

மித்தையெனுஞ்சகத்து-பொய்யென்றுசொல்லப்பட்ட பிர பஞ்சமானது, நின்பால்-சத்தியமாகியஉம்மிடத்தில், விள ங்குமோவெனவினவ-தோன்றுமோவென்றருச்சுனன் கே ட்க, சுத்திதனிலே-(சத்தியமாயுள்ள) கிளிஞ்சியினிடத்தி லே, ரசிதப்-(மித்தையாயுள்ள) வெள்ளியானது, தோன் றுதல்போல்-தோன்றுகிறதுபோல (சத்தியமாயுள்ளநம்மி டத்தின்மித்தையாயுள்ளபிரபஞ்சந்தோன்றியதாம், என்ற வரோ-என்றுகூறியருளியவரோநீர், (எ-று).

---

அயல்வெள்ளிசுத்தியின்மேலாரோபிதங்கூ டு
மியலுள்ளசகமுமுன்வேறிருந்ததுமுண்டோவெனவே
(௬௪)

இ-ள்.

அயல்வெள்ளி-அன்னியமாயுள்ளவெள்ளியானது, சுத்தியி ன்மேல்-(சத்தியவஸ்துக்ஞானஜன்யசமஸ்காராதிதோடத் தால்) கிளிஞ்சியினிடத்து, ஆரோபிதங்கூடு-ஆரோபித மாகத்தோன்றுதல்பொருந்தும் (அதுபோல்) இயலுள்ள ஜகமும்-இயல்பாயுள்ள பிரபஞ்சமும், முன்-சிருஷ்டிக்குப் பூர்வம், வேறிருந்ததுமுண்டோ-மித்தையாப்பிரபஞ்சத்து க்கு அன்னியமாகவிருந்ததுமுளதோ, எனவே-என்றருச் சுனன் கேட்க, (எ-று).

---

மனமயக்கம்பிடிக்கிலில்லாவஸ்துவுந்தோன்றிடுமது வோ
தனவில்விண்ணிற்றோன்பறக்கக்கண்டதுபோலென்றவரோ
(௬௫)

இ-ள்.

மனமயக்கம்பிடிக்கில்-மனம்பிராந்தியையடையில் இல்லா
வஸ்துவுந்தோன்றிடும் - இல்லாதபதார்த்தங்களும்தோன்
றும், அதுவோ-அஃதெங்கனமெனின், கனவில்- சொற்பன
த்தில், விண்ணில்-ஆகாயத்தில், தான்பறக்க-(முன்னம்பற
வாதிருக்கப்பட்ட) தான்பறந்து செல்வதாக, கண்டது
போல்-பார்த்தல்போல (பிரபஞ்சமுன்னில்லாததாயிருக்கி
லும் அஞ்ஞானதோடத்தாலாரோபிதமாகத்தோன்றவும்
கூடும், என்றவரோ-என்றுகூறியருளியவரோநீர், (எ-று).
எஞ்சியதாஷ்டாந்தம்விரிக்கப்பட்டது.

---

கனவுபோற்பிரபஞ்சமென்றீர்கண்விழித்தாற்கனவு
பொய்யாம்]
வினவுசகந்தினமுமெய்யாய்விளங்குவதென்சொல்லுமென
(சூசூ)

இ-ள்.

(*) கனவுபோற் பிரபஞ்சமென்றீர் – சொற்பனத்தைப்
போலப்பிரபஞ்சமு(மித்தை)யென்றுகூறினீர், கண்விழித்
தால்-கண்விழித்தலாகிய சாக்கிரத்துக்கு வந்த மாத்திரத்
தில், கனவு பொய்யாம்-சொற்பனமித்தையாய் விடுகிறது
(அங்ஙனமின்றி) வினவுசகம்-சொற்பனசமானமாக விவ
கரிக்கப்பட்ட பிரபஞ்சமானது, தினமும்-நாள்தோறும்,
மெய்யாய்விளங்குவது-சத்தியமாக விளங்கிக்கொண்டிருப்
பது, என்சொல்லுமென-எதனாலேகூறியருளவேண்டுமென்
றருச்சுனன்கேட்க (எ-று)

(*) கனவுபோற்பிரபஞ்சமென்றுபகவவான் கூறியிருட
பதுபோலவே - கைவல்லியநவநீதத்தில். "காண்பவெல்
லாஞ்-சொற்பனம்போலுமென்றே துணிந்தவன் ஞானியா
வான்". எனக்கூறியிருப்பதுகாண்க.



மெய்யாகவிளங்குவதுமெய்ஞ்ஞானம்வருமளவு ம்
பொய்யாம்பின்கனவதுபோற்போதம்வரிலென்றவரோ
(சூஎ)

இ-ள்.

மெய்யாக-(பிரபஞ்சஞ்) சத்தியமாக, விளங்குவது-விளங்கிக்கொண்டிருப்பது, * மெய்ஞ்ஞானம் வருமளவும் - தத்துவஞானமுதயமாகும் பரியந்தமும், போதம்வரில் - தத்துவஞான முதயமாகில், பின்-பிற்பாடு, கனவதுபோல்-சொற்பனமித்தையாவது போல, பொய்யாம்-பிரபஞ்சமுமித்தையாய்விடும், என்றவரோ-என்றுகூறியருளியவரோநீர், (எறு).

(*) சகந்தினமுமெய்யாக விளங்குவதெதனாலென்னுங்கடாவிற்குமெய்ஞ்ஞானம் வருமளவுமென்றமையால்மெய்ஞ்ஞானமுதயமாதற்குப் பூர்வமுள்ள அஞ்ஞானமே பிரபஞ்ச மெய்யாக விளங்குகிறதற்குக் காரணமென்பது விடையென வூகித்துணர்க.

---

முன்புகண்டகனவுபொய்யாமொழிசாக்கிரம்போல
வென்றீர்]
பின்புமுத்தித் திசையடைந்தும்பிரபஞ்சகிற்பதேதெனவே
(சூஅ)

இ-ள்.

மொழிசாக்கிரம்-(ஸ்திரமென்றுசொல்லத்தக்க)சாக்கிராவத்தையில், முன்புகண்ட - பூர்வங்கண்ட, கனவு- (அஸ்திரமாகியசொற்பனம், பொய்யாம் போல-மித்தையாவது போல(ஞானசாக்கிரத்திற்பிரபஞ்சமு) மித்தையாய்விடும், என்றீர்-என்றுகூறியருளினீர், பின்புமுத்தித்திசையடைந்தும் மோக்ஷநிலமையையடைந்த பிற்பாடும், பிரபஞ்சகிற்பது-பிரபஞ்சந்தோன்றிக்கொண்டிருப்பது, ஏதெனவே-எதனாலென்றருச்சுனன் கேட்க, (எ-று).

தெரிந்தவர்க்குத்தோற்றுவதுதெத்தபடம்போல்வ
பரந்தசகங்காரியத்திற்பயன்படாதென்றவரோ தல்லாற்] (கூகூ)

இ-ள்.

தெரிந்தவர்க்கு (சொரூபத்தை) யறிந்தவர்க்கு, தோற்றுவது-தோற்றுவதாகிய, பரந்தசகம் - (நாமரூபாத்மகமாக) விரிந்துள்ள பிரபஞ்சமானது, தெத்தபடம்-(அக்கினியினு) லெரிந்த வஸ்திரம், போல்வதல்லால்-போன்றதாகுமேயல்லாமல், காரியத்தில் - (பந்தமுதலிய) காரியங்களைத் தருதற்கு, பயன்படாதென்றவரோ - உபயோகப்படாதென்று கூறியருளியவரோ நீர், (எ-று).

(1) அக்கினியினுலெரிந்த வஸ்திரம் வஸ்திரம்போற்றோன்றுதன் மாத்திரமேயன்றிக் குளிர் நீக்குதன் முதலிய காரியங்கட்குபயோக மாகாததுபோல ஞானிகட்குப் பிரமாத்மைக்கிய ஞானத்தால்வாதமாகிய பிரபஞ்சம் நாமரூபாத்மகமாகத் தோன்றுதன்மாத்திரமேயன்றிப் பந்தமுதலிய காரியங்களைத் தருதற் கேதுவாகாமையின் காரியத்திற் பயன்படாதென்றார்.

---

கன்மவினையஞ்ஞானங்கடந்துமதன்காரியமா ம்
புன்மையுறுமெய்யுடனேபோகாததேதெனவே (எய)

இ-ள்.

கன்மம்-ஆகாமிய சஞ்சித கன்மங்களும், வினை-வஞ்சிக்குமியல்பினையுடைய, அஞ்ஞானம் - அஞ்ஞானமும், கடந்தும்-நீங்கியும், அதன்காரியமாம்-அவ்வஞ்ஞான காரியமாகிய, புன்மையுறுமெய் - இழிவுபொருந்திய சரீரமானது உடனே-கன்மமுமஞ்ஞானமு நீங்கிய அந்த உத்தரக்ஷணமே, போகாததேதெனவே - நீங்காததெதனுலென் றருச்சுனன் கேட்க, (எ-று). கன்மவினையென்னும் பதங்கட்கு



ஆகாமியசஞ்சித கன்மங்களாகிய வினைகளும் - எனப்பொருள் கூறுவதுமுள.

---

வெட்டவிழுமரம்பசந்துவிளங்குதல்போற்சிலகா ல
நட்டகன்மமாய்ந்துமங்கநடித்திடுங்காணென்றவரோ (எக)

இ-ள்.

வெட்டவிழுமரம்- (ஒருவரால்) வெட்டப்பட்டு விழுந்த மரமானது, பசந்து விளங்குதல்போல்-பசுமையாகச் (சொற்பநேரம்) விளங்கிக்கொண்டிருத்தல்போல, நட்டகன்மமாய்ந்தும்- (தான்) செய்துள்ள கன்மநசித்தும், அங்கம்- (அதன்காரியமாகிய) சரீரம், நடித்திடும்-நடமாடிக்கொண்டிருக்கும், காணென்றவரோ-நீயறிவாயாகவென்று கூறியருளியவரோநீர், (எ-று).

---

சென்மம்போய்முத்தியினைச்சேரச்சிலரிருக்க த்
தொன்மையான்மாப்பலவோசொரூபம்பகருமென (எஉ)

இ ள்.

சென்மம்போய்-சன்மமானதுநீங்கி, முத்தியினை-மோக்ஷத்தை, சேர- (சில) ரடைய, சிலரிருக்க-சில(ரடையாமற்பந்தமுடையரா யிருக்கக்காணப்படுகின்றமையால், தொன்மை-பழமையாயுள்ள, ஆன்மாப்பலவோ-ஆன்மா அனேகமோ, சொரூபம் பகருமென - ஆன்மாவின் சொரூபத்தைக் கூறவேண்டுமென் றருச்சுனன்கேட்க, (எ-று).

சிலர் என்றது முன்னருஞ்சென்றியையும், பந்தமென்றது அவாய்நிலையான்வந்தது.

---

பிரமமென்றுமீசனென்றும்பெருகுபலசீவரென் று
மொமயக்கமலதான்மாவொருவனேயென்றவரோ (எங)

இ-ள்.

பிரமென்றும்-(குணரகிதமாயுள்ள,) பிரமமென்றும், ஈச னென்றும்-சர்வக்கிஞத்துவாதிகுணவிசிட்டனுயுள்ள ஈஸ் வரனென்றும், பெருகு-(கிஞசிக்கிஞத்துவாதிகுணங்க)ணி றைந்துள்ள, பலசீவரென்றும் - அனேகசீவர்களென்றும், உரை-(வேறுபடுத்தி) ச்சொல்வது, மயக்கமலது-பிராந்தி யேயல்லாமல்(எதார்த்தமல்ல), ஆன்மாவொருவனே-ஆத் மாவொருவனெனலே (எதார்த்தம்), என்றவரோ-என்று கூறியருளியவரோநீர், (எ-று). உரை-முதனிலைத்தொழிற் பெயர்.

---

ஏகந்தானன்மாவெனும்வகையேமெய்யா ... ...ஞ
லாகந்தோறும்பலவாயமர்ந்ததென்னேசொல்லுமென (எசு)

இ-ள்.

ஆன்மா-ஆன்மாவானது, ஏகந்தான்-ஒன்றே, எனும்வகை யே-என்றுகூறும்விதமே, மெய்யானல்-சத்தியமானல், ஆ கந்தோறும்-சரீரங்கள்யாவற்றிலும்,பலவாய்-பலவான்மாக் களாக, அமர்ந்ததென்னே-பொருந்தியிருப்பதென்னையோ, சொல்லுமென - கூறியருளவேண்டுமென் றருச்சுனன் கே ட்க, (எ-று).

தோறும்என்றது பன்மைப்பொருளில்வந்த இடைச்சொல்

---

பலகடத்திற்சலத்தூடுபோனுவிம்பந்தோன்றுதல்போ
றொலைவில்புத்திதொறுமான்மாத்தோன்றுதல்காணென்
[வரோ (எரு)

இ-ள்.

பலகடத்தில் - பலகடங்களிலுள்ள, சலத்தூடு - சலங்களி லுள், பானுவிம்பம் - சூரியவிம்பமானது, தோன்றுதல்



போல்-(பலவாகப்பிரதிபலித்து) த்தோன்றுகிறதுபோல, தொலைவில்புத்திதொறும் - அளவில்லாத புத்திகள்தோ றும், ஆன்மா-(ஏகமாயுள்ள) ஆன்மாவானது, தோன்று தல்-(பலவான்மாக்களாகத்)தோன்றுகிறது, காண்-நீதெரி ந்துகொள்வாயாக, என்றவரோ-என்றுகூறியருளியவரோ நீர், (எ-று).

---

ஆதித்தன்போலான்மாவளவில்புத்திதொறுந்தோன்றிற்
சாதிக்குமுத்தியெவர்தமக்கதனைச்சாற்றுமென (எசா)

இ-ள்.

ஆதித்தன்போல்-(ஒன்றாயிருந்தும் உபாதிவசத்தாற்பலவா கத்தோன்றுகின்ற சூரியனைப்போல, ஆன்மா-ஏகமாயுள்ள ஆன்மாவானது, அளவில்புத்திதொறும்-அளவில்லாதபுத் திகளாகியவுபாதிக்டோறும், தோன்றில்-பலவாகத்தோன் றுமேயானல், சாதிக்குமுத்தி - அப்பியாசித்தடையத்தக்க மோட்சமானது, எவர் தமக்கு - எவர்கட்கு, அதனைச்சா ற்றுமென - அதனைக் கூறியருள வேண்டுமென்றருச்சுனன் கேட்க, (எ-று).

---

பந்தமுத்திதானுமந்தப்பரந்தபுத்திதனக்கே யா
மந்தவிம்பந்தனக்கிலையென்றறிவுவரச்சொன்னவரோ (எஎ

இ-ள்.

(1) பந்தமுத்திதானும்-பந்தமோக்ஷமென்பதும், அந்த- மேற்கூறிய, *பரந்தபுத்திதனக்கேயாம்- (விடயங்களிற்பா விய) புத்திக்கொயாகும், அந்தவிம்பந்தனகு-அழகியவிம்ப சொரூபமாகிய ஆத்மாவிற்கு, இலையென்று-பந்தமுத்தியி லையென்று, அறிவு வரச்சொன்னவரோ-ஞானமுதயமா ம்படிசொல்லியருளியவரோ நீர், (எ-று).

(1) பந்தமுமுத்தியும்புத்திக்கேயன்றி அந்தவிம்பந்தனக்கிலையென்றுபகவான்கூறியிருப்பதுபோலவே, வாசிட்டத்தில், "துங்கமெய்யுணர்வாய்ப் பந்தமற்றிருந்துந்தொடர்புறுபந்தமுண்டென்று பங்கமுற்றபரேலமலமாயழியாப் பரம்பொருள்பந்தமுற்றிடுமோ", எம்-"அந்தமற்றொன்றாய் விகற்ப மற்றறிவாயழிவிலாப் பரம்பொருளிருக்கப் பந்தமுற்றவரார் முத்தி பெற்றவரார்பாவனை விகற்பமேயனைத்துஞ்சிந்தனைவிரிவுபந்தமாமதனைத்தீர்ந்திடன்முத்தியாம்", எம்-அருளிச் செய்திருப்பதுகாண்க

---

பரமேகமாயுமதிற்பலசீவரேதென
யொருகடலிற்பலகுமிழியுதிப்பதுபோலென்றவரொ வே (எஅ)

இ-ள்.

பரமேகமாயும்-பிரமம்ஒருதன்மையதாகவிருந்தும், அதில்-அப்பிரமத்தில், பலசீவர்-பலதன்மையவானசீவர்கள், ஏதெனவே-தோன்றுகின்றதெங்ஙன மென்றருச்சுனன் கேட்க, ஒருகடலில்-ஒருதன்மையதானசமுத்திரத்தில், பலகுமிழிபோல்-பல்தன்மையவான புற்புதாதிபேனதரங்கங்கள், உதிப்பது போல்-(காற்றின்செயலாற்)றோன்றுவதுபோல, (ஒரு தன்மையதானபிரமத்திற் பலதன்மையவான சீவாகள் சன்மச்செயலாற்றோன்றுவார்கள்)என்றவரோ-என்றுகூறியருளியவரோநீர், (எ-று).

குமிழிஎன்றதனுல் அதற்கினமாயுள்ள பேன தரங்கங்களையும் வருவித்தாம்.

---

சீவனதுதானென்றுஞ்சேரும்பிரமயென்
மாவதுவோபேரின்பமாங்கதெனக்கோதுமென (எ



இ-ள்.

சீவன்-சீவனே, தானென்றும்-தனது சொரூபமென்றும், அது-அச்சீவனுனது, *பிரமம்-பிரமத்தை, சேருமென்றும்-அடையுமென்றும்(சிலர்கூறுகின்றபடி), ஆவதுவோ-ஆகின்றதுவோ, பேரின்பம்-பிரமானந்தம், அதெனக்கு-அப்பிரமானந்த(முதயமாகும்விதத்தை)யடியேனுக்கு, ஓதுமென-அனுக்கிரகம் பண்ண வேண்டுமென்றருச்சுனன் கேட்க, (எ-று). ஆங்கு-அசை

(*) பிரமம்-என்பதில்சாரியையும்இரண்டனுருபுந்தொக்கன.

---

ஏகம்பிரமமிரண்டிலைநீவேறும ல
சோகமுறும்பேதமறிற்றோன்றுமின்பமென்றவரோ (அய)

இ-ள்.

*ஏகம்பிரமம்-பிரமமொன்றேயாகும், இரண்டிலை.

(சுசாதி-விசாதி-சுவகதபேதமாகிய) துவிதஙகளில்லை, நீ-(ஆன்மாவாகிய)நீ, வேறுமல-பிரமத்துக்கன்னியமுமல்ல, சோகமுறும் - துக்கத்தைப்பொருந்துவதற் கேதுவாகிய, பேதமறிதல்-(2) பேதப்பிராந்தி-நீங்குமேயாகில், இன்பம்-பிரமானந்தமானது, தோன்றுமென்றவரோ-(சுயமாகவே) உதயமாகுமென்று கூறியருளியவரோநீர், (எ-று).

* ஏகம்பிரமமிரண்டிலையெனப்பகவான் கூறியிருப்பது போலவே-வாசிட்டத்தில்- "பொருகடலிற்றிரைமுதலாய்ப் பிறந்தவெல்லாம் புனலாகிவிளங்காமற் புழுதியாமோ-வொருபொருளாம் பிரமமாத்திரமேயல்லாலு பயமெனுங் கற்பனைப்பேரொன்றுமில்லை - பெரியிடத்திற் குடமாத்திரமேயல்லாலிரண்டுண் டோவவ்வகைபோலென்று மொன்றாம்"-எனவும்-வேதாந்தசூடாமணியில்- "சுருதியினுளேக

மேவாத்து விதமென்னுஞ் சொற்கிடையுளேகமெனுஞ் சொல்லதனுக்கயிக்க மரிதினுணரேவவென்னுமிடைச்சொற்குத்தேற்ற மத்துவிதமெனு மொழிக்குத்துவித விலக்காகக்-கருதுபொருள் வருதலினுலிம்முறையேமாயகற்பனைகள் கடந்து நிரவயமாகியென்றுந்-திரிதலில்சின்மயமாகுமொரு பிரமந்தனக்குத்தெரித்த சுவகதசமுதலாயின மூன்றுமிலையே" -எனவும்-பிரமகீதை-௩௪-வது கடவல்லியோடு சுவேதாச்சுவதரவுப நிடதார்த்தங்களுணைத் தவத்தியாயத்தில்-"பரம்பரனை - யல்லாதொன்றுமில்லை யெனவனுபவத்தாலகத்துணர-வல்லார்தமக்குப்பேரின்பம்வடிவாய் மொழியு மாமறைதான்"-எனவுங்கூறியிருப்பது காண்க.

(2) பேதப்பிராந்தியினிலக்கணத்தையும், அப்பிராந்தி நிவிர்த்தியாதற்குரிய திருட்டாந்த சகிதமாகிய விசாரங்களையும்அறிய விரும்பில் விசாரசந்திரோதயம். ௯-வது கலையிற்காண்க.

---

சிவபேதம்போமோ சித்தொன்றுமோவென. வே
யாவன்மனமறுஞ்சுழுத்தியவத்தையிற்பாரென்றவரோ (௮௧)

இ-ள்.

சிவபேதம்போமோ-சிவத்துவாதிபேதங்கணீங்குமோ, சித்தொன்றுமோவெனவே-ஒன்றாகிய சின்மாத்திரசொரூபமாகுமோவென்றருச்சுனன் கேட்க, ஆவல்மனம்-விடயங்களிலிச்சையுள்ளமனமானது,அறுஞ்சுழுத்தியவத்தையில்-கெட்டுப்போகாநின்ற சுழுத்தி (1) யவத்தையில், பாரென்றவரோ-பார்ப்பாயென்றுகூறியருளியவரோ நீர், (எ-று).

(1) அவத்தையென்பதுகாலம்.

---

பேதமலவிவ்வுலகம்பிரமமயமென்றறிந்து ம
பூதமயமாய்த்தோற்றல்போகாததேதெனவே ப
(௮௨



இ-ள்.

இவ்வுலகம்-இந்தப்பிரபஞ்சமானது, பேதமல - (பிரமத்துக்கு) வேறல்ல, பிரம *மயமென்றறிந்தும் - பிரமசொரூபமேயென்றறிந் †திருந்தும், பூதமயமாய்த்தோற்றல்-பஞ்சபூதமயமாகத்தோற்றுதல், போகாததேதெனவே - நீங்காததுயாதினலென்றருச்சுனன் கேட்க, (எ-று).

(*)மயமென்றதில்-தேற்றேகாரம்விகாரத்தாற்றொக்கது

(†) இருந்தும் என்றதிலுள்ள உம்மைஉயர்வுசிறப்புப்பொருளது.

---

கானலைநீரென்றோடிக்கண்டவர்க்குத்தீர்ந்தபின்னு ம
வானுலவுநீராகிவயங்குதல்போலென்றவரோ (௮௩)

இ-ள்.

கானலைநீரென்றோடி-பேய்த்தேரினைச்சலமெனக்கருதிச்சென்று,கண்டவர்க்கு-(இதுசலமல்லபேய்த்தேரென்றறிந்தவர்க்கு)தீர்ந்தபின்னும்-சலமென்னும்பிராந்தி) நீங்கியபின்னரும், உலவு-செல்லுகின்ற, வான்-சிரேஷ்டம் பொருந்திய, நீராகி-சலம்போலாகி,வயங்குதல்போல்-(பேய்த்தேர்)தோன்றுதல்போல,(பிரபஞ்சத்தைப்பிரமமயமாகவறிந்திருக்கி…ம் பஞ்சபூதமயமாகத்தோற்றிக் கொண்டிருக்கும்,என்ற…தரா-என்றுகூறியருளியவரோநீர், (எ-று).

…ஞ்சியதாட்டாந்தரத்தை விரித்தாம் - பிராந்தி என்றது …வாய்நிலையான்வந்தது.

---

…றிவானுநல்லறிவுமறியப்படும்பொருளு ம
…றிவாய்மூன்றாயிருத்தல்பேதமலவோவெனவே (௮௪)

### இ-ள்.

அறிவானும்-ஞாதிருவும், நல்லறிவும்-நன்மையாகியஞானமும், அறியப்படும்பொருளும் - அறியப்படுவதாகியஞேயமும், பிறிவாய்-வெவ்வேறாய், மூன்றாயிருத்தல் - திரிபுடியாகவிருக்கின்றது, பேதமலவோவெனவே - (ஒன்றேபொருளென்னுமத்துவிதசித்தாந்தத்திற்கு) விரோதமல்லவேவென்றருச்சுனன்கேட்க, (எ-று).

---

சொற்பனத்திற்றனித்தொருவன்றோற்றம்வேறில்லையங்கே
கற்பனையாம்பொருளறிவுகாண்பவன்போலென்றவரோ (௮௫)

### இ-ள்.

தனித்தொருவன் - தனித்துநித்திரைபண்ணுகின்றவொருவனது, சொற்பனத்தில்-சொற்பனாவஸ்தையில், (தோன்றுகின்றதிரிபுடித்) தோற்றம்-தோற்றங்கள், அங்கேபோல - அச்சொற்பனாவஸ்தையிற்(சொற்பனதிருஷ்டாவுக்கன்னியமாகவில்லாதன) போல, கற்பனையாம்-பொய்யாகிய, பொருள்-ஞேயமும், அறிவு - ஞானமும், காண்பவன் -ஞாதிருவும், வேறில்லையென்றவரோ-சாக்ஷிசைதன்னியத்துக்கன்னியமாகவில்லையென்று கூறியருளியவரோநீர், (எ-று).

---

கற்பனையாம்பேதங்கள்காணுமற்போம்வகை
விற்பனமாயானறியவிளம்புமெனவேவணங்க (௮...

### இ-ள்.

கற்பனையாம்பேதங்கள் - பொய்யாகிய திரிபுடிப்பேதங்கள் காணுமற்போம்வகையை - தோன்றுமற் போகின்றவிதத்தை, விற்பனமாய்-சுருதி, யுத்தி, யனுபவமாக, யானறிய



அடியேனறியும்பொருட்டு, விளம்புமெனவே - அனுக்கிரகம் பண்ணவேண்டுமென்பதாக, வணங்க - அருச்சுனன் நமஸ்கரித்துவினவ, (எ-று).

---

...மாம்யோகத்தாற்றூயமனம்லயமா ஞ
...மூவகைவிகற்பமழியுமென்றுசொன்னவரோ (௮௭)

### இ.ள்.

துரியமாம்-துரியாவத்தையையடைதற்கேதுவாகிய, யோகத்தால்-[(*)லயம், (†) விக்ஷேபம், (‡) கஷாயம் ($) ரசாஸ்வாதமென்னும் நான்கு பிரதிபந்தங்களுமின்றித் தியானிக்கின்ற] நிதித்தியாசனத்தால், தூயமனம் - பரிசுத்தமாகிய சாத்வீக மனதும், லயமானல் - பிரமசொரூபாகாரமாகவொடுங்குமானல், அரியமூவகைவிகற்பம்-நீங்குதற்கருமையாயுள்ள (||) திரிபுடிவிகற்பங்கள், அழியுமென்று -தோற்றமின்றிக்கெடுமென்று, சொன்னவரோ - சொல்லியருளியவரோ நீர், (எ-று).

(*) தியானநிமித்தம் விடயங்களினின்றுந்திருப்பப்பட்ட மனது தியானத்திற் பிரவருத்தியாது வெகுநாட்பழகிய சுழுத்திப்பழக்கத்தாற் சுழுத்தியிற்செல்வதுலயமாம்.

(†) லயத்துக்குக்காரணமாகிய நித்திராசேட மசீரணமதிகபோசனஞ் சரீரசிரமமென்னும்நான்கிற்குறைவற நித்திரைசெய்தலா னித்திராசேடத்தையும் - முன்புசித்த அன்னமுதலியவை சீரணிக்கும்பரியந்தம்போசனஞ்செய்யாதிருந்த லற்பபோசனஞ்செய்குதன் முதலியவேதுக்களா லசீரணத்தைய மதிகபோசனத்தையும்-அலைச்சல் முதலியதொழில்களின்றியிருத்தலாற்சரீரசிரமத்தையும்-நீக்குவித்தலாலனும் - அல்லது பிராணயாமத்தாலேனும் - லயத்தினின்றுந்திருப்பப்பட்டமனது தினந்தோறும் பழகிய சாக்கிரஸம்ஸ்காரத்தாற் சத்தாதி விடயங்களையும் விடயபோகங்களையும் கருதியவைகளிற்பிரவருத்திப்பதே விக்ஷேபமாம்.

(‡) சத்தமுதலிய போக்கியவிடயங்களின் அசுத்தாதியிலக்கணங்களையு மவைகளையடைதலால் வருந்துக்கங்களையும் - பிரமத்தின் சச்சிதானந்த விலக்கணங்களையுமதனையடைதலால் வரும் பரமசுகத்தையும் சிந்தித்துப்பார்த்[து]தலாலேனும்-அல்லது சாக்கிரசொற்பனங்கள்சுழுத்[தியி]ல்லாதனபோல அசத்து ரூபமாகிய போக்கியவிடயங்[கள்] சத்துருபமாகிய பிரமத்திலில்லையெனப்பார்க்கின்ற வா[...] திருட்டியினாலேனும் - அல்லது விடயங்கள் தோணியினுஞ் சொற்பனஞ் சுத்திகாரசிதம்போற் பொய்யெனப்பார்க்கு மித்தையா திருஷ்டியினாலேனும்-அல்லது நானாவிதபேன தரங்கபுற்புததிவலைகளனைத்தையுஞ் சலமயமாகப் பார்க்குதல்போல நானாவிதபேதபோக்கிய வஸ்துக்களாகிய திரி[...]யங்களனைத்தையு மகண்டேகரசப்பிரமமாகிய தனதுசொரூபமாகவே பார்க்கின்ற தன்மய திருட்டியினாலேனும் - அடிக்கடியுதயமாகின்ற சகலவிக்ஷேபங்களையுஞ் சாக்கிரதையாயிருந்து நாசஞ்செய்து திருப்பப்பட்டமனது பின்னிரும்லயவிக்ஷேபங்களிற்செல்லுமாயினதனை நிரோதித்துத் தியானம்பண்ணும்போதம்மனது தீவிரராகத்து வேஷாதி வாசனையினாற் றுக்கங்களின் மூழ்கிச் சமாதியிற்போலே காக்கிரமா யிருத்தலே கஷாயமாம்.

($) கஷாயத்தை யிதுவேசமாதி யெனப்பிரமிக்காமல் விவேகபுத்தியாற் சூட்சுமமாகப்பார்த்து விக்ஷேபநிவிர்த்திக்குக் கூறியவுபாயங்களா னிவிர்த்தித்துத் தியானஞ் செய்து வருங்காற் சமாதியாரம்பத்திற் சவிகற்பமாகவுதிக்கின்ற ஆனந்தானுபவத்தை யிதுவேபரமானந்தானுபவ[மெ]மென்றவ்வானந்தத்திற்றானே மனது மூழ்கியிருத்[தலே] ரசாஸ்வாதமாம்.

(வினா)-ரசாஸ்வாதத்தையும் பிரதிபந்தமாகக்கூறியதென்னையெனின்-



(விடை)-ரசாஸ்வாதமென்னும் விகற்பசகிதமாகிய ஆனந்தமானது இதுவே பரமானந்தமென மனதுமூழ்கி மேலான நிருவிகற்பமாகிய ஆனந்தத்தை யடைய விரும்பா திருத்தற்கேதுவாயிருத்தலின் பிரதிபந்தமெனக்கூறியதென்க.

(வினா)-நிருவிகற்பமாகிய பரமானந்தமெங்ஙன மனுபவிக்கக்கூடுமெனில்.

(விடை)-ரசாஸ்வாதத்திற்றானே நின்றுவிடாமல் விவேகத்தால் நீங்கித் தயிலதாரைபோல நிரந்தரம் நெடுங்காலம் நேயத்தோடு லயமுதலியபிரதிபந்தங்களின்றித்தியானிக்கின்ற தியானப்பியாச பலத்தினாலு மீஸ்வரகிருபையினாலுந் தியானமுந்தியானிக்கின்ற புருடனுமிழந்து தியானவஸ்துவாகிய பிரமசொரூபமாத்திரமாகச் சேடித்துள்ள நிருவிகற்பசமாதியையடைந்து அதுவும் லயமோகசாயமோவென மயங்கி நிலைபெயர்ந்து விடாமற்றிரமாகநிற்கின்ற சமாதியப்பியாசத்தால் மனதுபரிபூரண பரப்பிரமசொரூபத்திற் பாலிற்கலந்த சலம்போலகண்டேகரசமாகக்கலந்து விசிராந்தியடையிற் சூட்சுமமாகச்சாந்தி யடைந்துள்ள அம்மனோவிருத்தியில் நிருவிகற்ப பரமானந்த மாவிற்பவிக்கப்பட்டனுபவிக்கக் கூடுமென்க.

(‖) திரிபுடிவிகற்பம் பதினான்கு விதமாம் - இவைகளை [...]ய விரும்பில் விசாரசாகரம் - ௫-வது தரங்கத்தினும் [...]சாரசந்திரோதயம் - ௫-வது கலையினும் - பதார்த்தமஞ்[...]ந்சா - ௰௪-வது பதார்த்தவருணனையினும் பாலபோதம் [...]-வது உபதேசத்திலுங்காண்க.

திரிபுடியென்பது-மூன்றுமோர்காலத்துச் சேர்ந்திருப்[ப]னவாயும் மூன்றிலொன்றில்லாத காலத்து மற்றிரண்டு

மில்லாதனவாயு - முள்ளனவேவையோ அவைகட்குத்திரி
புடியென்று பெயர்-ஞாதிருஞானம் - ஞேயமாகிய மூன்று
மோர்காலத்துச்சேர்ந்திருப்பனவாயும் - மூன்றிலொன்றில்
லாதகாலத்துமற்றிரண்டுமில்லாதனவாயுமிருப்பதையுந்த்
துணர்க.

---

சிறந்திருக்குமான்மாவுஞ்செகமெல்லாநிறைந்திருந் து
மறைந்தெனக்குத்தோன்றுதவகையேதுசொல்லுமென
(அஅ)

இ-ள்.

சிறந்திருக்குமான்மாவும் - (திரிபுடிரகிதமாய்ச்)சிறப்புற்றி
ராநின்ற பரமாத்மாவும், செகமெல்லாம்- பிரபஞ்சமெல்
லாவற்றினும், நிறைந்திருந்தும் - நிறைவுற்றிரு[illegible], என
க்கு- அடியேனுக்கு, மறைந்து - மறைவுற்று, தோன்றுத
விளங்காதிருக்கின்ற, வகையேது - விதம்யாதினால்,சொல்
லுமென - அதனைக்கூறியருள வேண்டுமென்றருச்சுனன்
கேட்க, (எ-று). உம்மையிரண்டனுள் முன்னையது உய
ர்வுசிறப்பு - பின்னையது - ஆக்கம்.

---

சத்துச்சித்தானந்தந்தான்மூன்றுமதனுட னே
யொத்துற்றுநாமவுருவஞ்சகமாகி
(அகூ)

இ-ள்.

சத்துச்சித்தானந்தமூன்றும் - அஸ்திபாதிப்பிரியமென்னு
மூன்றிலக்கணங்களும்(பொருந்திய), அதனுடனே - அப்
பிரமத்துடனே, நாமவுருவம் - நாமரூபமாகிய விரண்டும்,
ஒத்துற்று - சேர்ந்து - சகமாகி - பிரபஞ்சமாகி, (எ-று).
தான் - அசை.

---

இருக்கையினிற்றோன்றுதிவைமூன்றும்பிரமமெ ன
மரிக்கில்வரும்பின்னிரண்டுமரிசகமென்றுரைத்தவரோ
(கூ0)



இ-ள்.

இருக்கையினில்-இருக்ுன்றபடியால், தோன்றாது - (ஆத்
மா). விளங்கமாட்டாது,இவைமூன்றும் (சச்சிதானந்தமா
கிய) இவைகள்மூன்றும், பிரமமென - பிரமவிலக்கணமெ
னவும், பின்னிரண்டும் - பிற்கூறிய நாமரூபமாகியவிரண்
டும், மரிசகமென்று - கெட்டுப்போகாநின்றபிரபஞ்சவிலக்
கணமெனவும்,ஸ்மரிக்கில்-சிந்திக்கில்,வரும்-(உனக்குஆன்
மாவிளங்கும்படிவரும் - என்றுரைத்தவரோ - என்றுகூ
றியருளியவரோநீர், (எ-று).

---

அறிந்துகொள்ஞானத்தாலேயான்மாவை யென்றுரைத்தீர்
சிறந்தொளிருமான்மாவுந்திரிசியமாமோவெனவே (கூக)

இ-ள்.

ஆன்மாவை - ஆத்மசொரூபத்தை, ஞானத்தாலே - தத்து
வஞானத்தால், அறிந்துகொள்ளென்றுரைத்தீர் - அறிந்து
கொள்வாயாகவென்றுகூறியருளினீர், சிறந்து - சச்சிதான
ந்தமயமாகச்சிறப்புற்று, ஒளிருமான்மாவும் - பிரகாசிக்கப்
பட்ட (1) ஆத்மாவும், திரிசியமாமோவெனவே - (பிரபஞ்
சத்தைப்போல) விஷயமாகுமோ வென் றருச்சுனன் கே
ட்க, (எ-று).

(1) ஆன்மாவுமென்ற எச்சவுமமையால் பிரபஞ்சத்தை
ப்போலெனவிரிக்கப்பட்டது, இதனை - உயர்வு - சிறப்பாக
ஆக்கினும்அமையும்.

---

முந்தியஞானத்தாலேமுதிருமஞ்ஞானந்துரக்கி ல்
சிந்தையிலான்மாச்சுயமாய்த்திகழுமென்றுசொன்னவரோ
(கூஉ)

இ ள்.

முந்தியஞானத்தாலே - முதன்மையாயுள்ளதத்துவஞான த்தால், முதிரும்-அதிகரித்துள்ள, அஞ்ஞானத்தைநிவிர்த்திக்கில், அஞ்ஞானந்துரக்கில் - சிந்தையில் - சித்தத்தின் கண், ஆன்மா - ஆத்மாவானது, சுயமாய்த்திகழுமென்று - தன்மயமாகவிளங்குமென்று, சொன்னவரோ- கூறியருளி யவரோநீர், (எ-று).

---

இனியமுத்திச்சுகமிருப்பதெப்படியென்றேவின வ
வனுபவத்திலறிவிடயானந்தம்போலென்றவரோ, (௩௩)

இ-ள்.

இனியமுத்திச்சுகமிருப்பது - இனிமையாயுள்ள மோக்ஷ சுகமிருக்கின்றது,எப்படியென்றேவினவ-எதுபோலவென் றருச்சுனன்கேட்க, விடயானந்தம்போல்-விஷயசுகத்தை (யனுபவித்தறிவது) போல, * அனுபவத்திலறி -(மோக்ஷ சுகத்தையும்-) உனதுசுவானுபவத்திலறிந்து கொள்வா யாக - என்றவரோ - என்றுகூறியருளியவரோநீர்,(எ-று),

(*) சருக்கரையின் சுவையாதெனுங் கடாவிற்குத் தித் திப்பென விடைகூறுங் காலையிற் றித்திப்பெங்ஙனமிருக்கு மென வினவியவர்கட்கு அனுபவித்தறிவாயெனலேயன்றி வாக்கினாலிங்ஙன மிருக்குமென்றுரைத்தற்குக் கூடாதது போல மோக்ஷசுகமு மனுபவித்தறியக் கூடியதேயன்றி வாக்கினா லிங்ஙனமிருக்குமென் றுவமித்துரைத்தற்குக் கூடாததென்பதுதோன்ற - அனுபவத்திலறி விடயானந் தம்போலென்றார்.

---

மனலயம்வந்தவரலதுமற்றிலரோமுத்தரெ னச்
சனகனைப்போற்சீவன்முத்தர்தாமுமுளரென்றவ ரோ
(௩௪)



இ ள்.

மனலயம் வந்தவரலது - மனோநாசம்வந்தவர்களேமுத்தர் களல்லாமல், மற்றிலரோ முத்தரென-(மனோநாசமின்றிய) மற்றயர்கள் சீவன் முத்தர்களல்லரோ வென்றருச்சுனன் கேட்க, சனகனைப்போல்-(விவகாரதிசையிலிராநின்ற)சன கராசனைப்போல, சீவன்முத்தர்தாமும்-(மனோலயமின்றிய பிரமவித்துக்களாகிய) சீவன்முத்தர்களும், உளரென்ற வரோ-இருக்கிறார்களென்று கூறியருளியவரோநீர், (எ-று), தாம் - சாரியை,

---

சீவன்முத்தியடைந்தோர்கள்செயலுமவர்தங்குண மு
நாவுரைக்கும்வாசகமுநானறியச்சொல்லுமென (௩௫)

இ ள்.

சீவன் முத்தியடைந்தோர்கள் - சிவத்துவம் விடுபட்டிரா நின்ற முத்தியையடைந்தவர்களினது, செயலும்-ஒழுக்க மும், அவர்தங்குணமும் - அவர்களினது குணங்களும், நாவுரைக்கும் வாசகமும் - அவர்கள்நாவினால்வசனிக்கும் வசனங்களும், நானறியச் சொல்லுமென - அடியேனறியும் படியாகக் கூறியருள வேண்டுமென்றருச்சுனன் கேட்க, (எ-று).

---

வருங்கருவுபிறப்பினோடுவளர்தல்பருத்தல்குறை த
லோருங்கலுமெய்கென்றதனையொருத்திருப்பாரென்ற
[வரோ] (௩௬)

இ ள்.

வருங்கருவு-(கன்மத்துக்குத்தக்கதாக) வராநின்ற கருப்ப மாதலும், பிறப்பினோடு (பூமியிற்) பிறத்தலோடு, வளர் தல்-வளர்தலும், பருத்தல் - பருமனுதலும், குறைதல் -

மெலிதலும், ஒருங்கலும் - நாசமடைதலுமாகிய சட்பா
விகாரங்கள், மெய்க்கென்று - சரீரத்துக்கேயென்றறிந்து,
அதனை-அச்சரீரத்தினை, ஒறுத்திருப்பாரென்றவரோ - அபி
மானியாது வேறுப்புற்றிருப்பார்களென்று கூறியருளிய
வரோநீர், (எ-று).

---

பார்ப்பதுவுங்கேட்பதுவும்பகர்வதுவுஞ்செல்வது வு
மேர்ப்பதுவுங்கரணதன்மமெனப்புகல்வாரென்றவரோ (கூஎ)

இ ள்.

பார்ப்பதுவும்-உருவங்களைப்பார்க்குதலும், கேட்பதுவும்-
சத்தங்களைக்கேட்குதலும், பகர்வதுவும்-வசனிக்குதலும்,
செல்வதுவுங் - கமனாகமனஞ்செய்குதலும், ஏர்ப்பதுவும்-
வாங்குதல் கொடுத்தலும், கரணதன்மமென - கரணங்
களினதுதருமமென்பதாக, (*)புகல்வாரென்றவரோ - வச
னிப்பார்களென்று கூறியருளியவரோ நீர், (எ-று).
வாசகமுனைத்தல்.

(1) தவிர்ந்தாரெனவும் பாடமுளது - அங்ஙனமாயின்
புகல்வாரென்றதையே பாடமாகக்கொண்டு பொருள்
கூறியதென்னையெனின் - பழமையாயுள்ள சிலபிரதிகளிற்
புகல்வாரென்றிருந்தமையினானும் - கூடு-வது- செய்யுளில்
அருச்சுனன் பகவானைநோக்கிச் சீவன் முத்தர்கள் நாவு
ளைக்கும் வாசகமும் நானறியச்சொல்லுமென்ற கடாவிற்
குப் புகல்வாரெனற் விடைபொருத்தமாயமைதலினானும்-
சாஸ்திரவிரோதமின்மையினானும்-புகல்வாரென்றதையே
கொண்டு பொருள் கூறினும்-தவிர்ந்தாரென்றதையே கொ
ள்ளில் - அவைகளிலுள்ள அபிமானங்களீங்கியிருப்பார்
களெனப்பொருள்படும் அங்ஙனமாயின் அருச்சுனன்வினா
வியகடாவிற்குப்-பகவான் விடை கூறுது தவிர்ந்தா
ரெனல்வரும்.



பசிதாகமுயிர்க்கெனவேபயந்துக்கஞ்சுகங்காம ம்
வசிகோபமதிக்கெனவேமகிழ்ந்திருப்பாரென்றவரோ
(கூஅ)

இ ள்.

பசிதாகமுயிர்க்கெனவே- பசியும் - தாகமும் பிராணனுக்
கெனவும், பயந்துக்கஞ் சுகங்காமம்—பயமும்துக்கமும் சுக
மும் காமமும், வசிகோபம்-குற்றம்பொருந்தியகோபமும்,
மதிக்கெனவே-புத்திக்கெனவும், (ஆன்மாவுக்கில்லையென
வுமறிந்து)மகிழ்ந்திருப்பாரென்றவரோ-சதாமகிழ்ச்சியோ
டிருப்பார்களென்று கூறியருளியவரோநீர், (எ-று) குண
முனைத்தல்.

---

வீடுந்தாரமுமுறவுமேவியென்றுமிருந்தா லு
நீடுந்தாமரையிலைநீர்நிகரொப்பாரென்றவரோ (கூகூ)

இ-ள்.

வீடும்-கிரகத்தோடும்,தாரமும்-மனையாளோடும், உறவும்-
சுற்றத்தாரோடும், என்றும்-சதாகாலமும், மேவியிருந்தா
லும் - கூடியிருந்தாலும், நீடும்-செழித்துள்ள, தாமரை
யிலைநீர் நிகரொப்பார்-கமலபத்திரோதகம்போலப் (பொ
ருந்தியும் பொருந்தா) திருப்பார்கள், என்றவரோ-என்று
கூறியருளியவரோ நீர், (எ-று). (செயலுனைத்தல்) நீடுதல்-
செழித்தல்.

---

பற்றிடுங்காயமுந்தானும்பன்னாளொன்றாயினும் பி
னுற்றபுளியம்பழமுமோடுமொப்பாரென்றவரோ (ஙா)

இ-ள்.

பற்றிடுங்காயமும்-(சடமாகப்) பொருந்திய சரீரமும், தா
னும்-ஆத்மாவாகியதானும், பன்னாள் - அனேககோடிகா

லம், ஒன்றுயிடினும் - ஏகமாகக்கூடியிருக்கினும், உற்ற பின்-ஞானமடைந்தபின்னர், புளியம்பழமும்-சிந்தகக்கனியும், ஒடுமொப்பார்-அதன் ஒடும் போற்பற்றின்றியிருப்பார்கள், என்றவரோ - என்றுகூறியருளியவரோநீர், (எ-று), செயலுரைத்தல்.

---

கூறுமுலகியற்கையுடன் கூடினுமெய்ஞ்ஞானம்வந்தோர்
சேறும்பிள்ளைப்பூச்சியும்போற்றிரிவார்காணென்றவரோ (ாக)

இ-ள்.

மெஞ்ஞானம்வந்தோர் - உண்மைஞானமுதயமாகியசீவன் முத்தர்கள், கூறும் - அசுத்தாதியிலக்கணங்களுடையதெனச்சொல்லப்படுகின்ற, உலகியற்கையுடன்-உலகசுபாவத்தோடு, கூடினும்-பொருந்தியிருக்கினும், சேறும்பிள்ளைப்பூச்சியும்போல் - சேற்றையு (மதிற்சஞ்சரிக்கின்றபிள்ளைப்பூச்சியையும்போல, திரிவார்காணென்றவரோ- (1) (அசங்கமாகவே),சஞ்சரித்துக்கொண்டிருப்பார்களென்று கூறியருளியவரோநீர், (எ-று). செயலுரைத்தல்.

(1) சங்கம், கலத்தல்-அசங்கம்கலத்தலின்மை ஆன்மாவேயசங்கமாயுள்ளதென்னும் விசாரமறியவிரும்பில்எமது கருணைமதயானையென்னும் பிரமானந்தசாகர சொரூபராகிய கோயிலூர்ச்சிதம்பரசுவாமிகள் செய்தருளிய இலக்கணவிருத்தியிற்காண்க.

---

ததியூடுகடைந்தவெண்ணெய்தான் மோரிற்கிடப்பது [போன்]
மதியோடுகூடினும்பின்மயங்கார்காணென்றவரோ (கூஉ)



இ-ள்.

ததியூடு[illegible]வெண்ணெய்-தயிரின்கட்கடைதலாலுண்டாகிய [illegible]னது, மோரிற் கிடப்பதுபோல்-மோரினிடத்துச்சம்பந்தமின்றிக்கிடத்தல்போல, பின்-ஞானமடைந்தபின்னர், மதியோடுகூடினும்-புத்தியோடுசேர்ந்திருக்கினும், மயங்கார்-மயக்க மடையார்கள், காணென்றவரோ-நீயறிவாயாகவென்றுகூறியருளியவரோநீர், (எ-று).

---

அருச்சுனன்றன்பொருட்டாகவனைவருக்கும்ஞானம்வரப்
பொருந்தியதேசிகவடிவாம்புண்ணியரேகண்வளரீர் (கூக)

இ-ள்.

அருச்சுனன் றன்பொருட்டாக - அருச்சுனனிமித்தமாக, அனைவருக்கும்-சகலமுமுட்சுக்களுக்கும், ஞானம்வர-ஞானமுதயமாகும்படி, பொருந்திய - அமைந்தருளிய, தேசிகவடிவாம் குருவடிவமாகிய, புண்ணியரேகண்வளரீர்-புண்ணியமூர்த்தியே, நித்திரைசெய்தருளும்,(எ-று).

---

ஆயர்குலமாதரளவிலோரைப்புணர்ந்து ந்
தூயபதினாறுயிரவருடன்றோய்ந்திருந்தும் (ாச)

இ-ள்.

ஆயர்குலமாதர் - யாதவவம்சஸ்திரீகள், அளவிலோரைப்புணர்ந்தும் - அளவில்லாதவர்களைச்சேர்ந்தும், தூய-பரிசுத்தமாகிய, பதினாறுயிரவருடன் - பதினாறுயிரமிராசஸ்திரிகளோடு, தோய்ந்திருந்தும் - கூடியிருந்தும், (எறு).

---

பரமமுனிவர்முன்னேபரிச்சித்தைத்தீண்டியன் று
பிரமசரியஞ்செலுத்தும்பெரொளியேகண்வளரீர் (ாரு)

இ-ள்.

பரமமுனிவர்முன்னே-மேலானமுனீஸ்வரர்கள்முன்பாக, பரிச்சித்தைத்தீண்டி -பரிச்சித்தரசனைப்பரிசித்து, அன்று-அக்காலத்தில், பிரமசரியஞ்செலுத்தும் - பிரமசரியத்தன்மையைநடாத்திய,பேரொளியே - பெருமைபொருந்தியசைதன்னியமே, கண்வளரீர் - நித்திரைசெய்தருளும் (எ-று)

---

வெண்பா.

ஆதிமூலம்விசயற்காதிமறையின்பொரு ளை
யோதியுணர்த்தியவிவ்வுண்மையினைக் காதலுற்றுக்
கற்றோருங்கேட்டோருங்காசினியில்வாழ்ந்துமுத் தி
பெற்றோர்கண்முத்தர்பெறும்பேறு ... ... ...(ாசூ)

இ-ள்.

ஆதிமூலம் - யாவுக்குமுதன்மையாயுங்காரணமாயுமுள்ள பகவான், விசயற்கு - அருச்சுனனுக்கு, ஆதிமறையின் பொருளை - முதன்மையாயுள்ளவேதார்த்தத்தை, ஓதியுணர்த்திய - உபதேசமூலமாகத்தெரிவித்துள்ள, இவ்வுண்மையினை -(எதார்த்தபோதகமாகியகீதாசாரமென்னும்)இம்மெய்நூலை, காதலுற்று-பிரியமுற்று, கற்றோரும் - படித்தவர்களும்,கேட்டோரும்-குருமுகமாகச்சிரவணஞ்செய்தவர்களும், காசினியில் வாழ்ந்து-உலகத்திற் சுகவாழ்வையுற்று, முத்தர்பெறும்பேறு-சீவன் முத்தர்களடையும்பிரயோசனமாகிய, முத்தி-விதேககைவல்லியமென்னு மோக்ஷத்தை, பெற்றோர்கள்-அடைந்தவர்களேயாம், (எ-று).

முற்றிற்று.



சிவமயம்.

# சிதம்பரதேசிகர்பதிகம்.

இஃது.

பிரமானந்தசாகர சொரூபராகிய, ஸ்ரீகோயிலூர்ச் சிதம்பர சுவாமிகள் மாணுக்கராயும்-திருவாரூரைச் சேர்ந்தவன் மீகபுரத்திலெழுந்தருளிய ஸ்ரீ குருதக்ஷிணமூர்த்தி சுவாமிகளாதீனத்திற்குரியவராயுமுள்ள மதுரைச்சிவானந்த சுவாமி களாலியற்றப்பட்டது.

---

வெண்பா.

சீரார்கழனிச்சிதம்பரமாதேசிகன் மே
லேரார்பதிகமியம்புதற்கு-நேர்துணையா ம்
வஞ்சக்கயமுகனைமாறுபடவென்றவைங் கர
கஞ்சக்கரக்கற்பக ... ... ... ம்

---

எழுசீர்க்கழிநெடிலாசிரியம்.

நீரின்மேலெழுது மெழுத்தினுக்கிடமை நேர்மையாய் வடிக்குகர்போலப், பாரின்மேலழியுமுடம்பினை வளர்க்கப் பலபொருட்டேடி நொந்தலையுங், காரிருணிகர்த்தமனத்தினேனெற்குக்கதிதரலெந்தநாளுரையாய், சீரருட்கடலே கழனியம் பதிவாழ்சிதம்பரதேசி கோத்தமனே, (க)

உய்யநூலுரைக்குஞ் சாதனவகையிலொன்றையு மடைந்
திலேன் மடவார், மையன்மேற்கொள்ளு நெஞ்சினே னிச்
சைமாய்த்த நின்னடியர்போற்பேசும், பொய்யனேன் றனை
யுங்கைவிடேல் விடினுன்புகழினுக்கழகின்றுங் கருணை,
செய்யவேவேண்டுங் கழனியம்பதிவாழ் சிதம்பரதேசிகோ
த்தமனே, ... ... ... ... ... (உ)

---

தந்தைதாய்புதல்வர் தம்பிழைநோக்கித்தணந்திடல்வழக்
கன்றுமதுபோ, லெந்தைநீயெனது பெரும்பிழைநோக்கி
யிகழ்ந்து கைவிட்டிடேல் விடின்மு, னிந்தையில்கருணை
நிதியெனநின்னைநிகழ்த்தியமறைகள் பொய்த்திடுமால், சிந்
தனைக்கரியாய் கழனியம்பதிவாழ் சிதம்பரதேசிகோத்த
மனே ... ... ... ... ... ... (ங)

---

கனிகையைமணந்துபினமவட்கின் பங்கல்வியிற்றந்திடார்
போல, வெனைநினதடியர்குழுவிடையொருவனெனமுனஞ்
சேர்த்தனைபின்னர், தனையெனக்கருளியழிவுறுவின் பந்தந்
திலையென் செய்வேனந்தோ; இனையளவெனினு மீய்ந்த
ருள் கழனிச்சிதம்பரதேசி கோத்தமனே ... (ச)

---

புகழினைவிரும்பித்துறவர் போனடிக்கும் பொய்மையேனி
ன்னன்பர்குழுவின், மகிழ்வுறச்சேர்ந்தும்நன்னடைபயிலா
மடமையேனென் செய்வேன்பவ்மா, மகழிடைமூழ்கியயர்
வுறுகின்றேனஞ்சலென் றெனக்கருள்புரிவாய், திகழ்மணிக்
குன்றே கழனியம்பதிவாழ் சிதம்பரதேசிகோத்தமனே (ரு)

---

மடமையாலுழலும் புன்மையேனெனையும்வாழ்விப்பதுன்
பரமன்றே, படமதிற்றோன்று மோவியவினங்கள் படத்
திலுக்கிதரமில்லதுபோற், சடமதாமுடல முதற்பிரபஞ்
சந்தனக்கு வேறிலையெனவாய்ந்து, திடமுறத் தெளிந்த
துறவர் வாழ்கழனிச் சிதம்பரதேசி கோத்தமனே (சு)





சிவமயம்.

# சூதகீதை.

## பாயிரம்.

சுககன நடன ராஜன் சுத்தமாஞ் சொருபஞ் சார்ந்த
வகிலநா யகியா மம்மை யருளிய தனய னாகிச்
சகலமா மிடருந் தீர்த்துச் சச்சிதா னந்த மாகப் [வாம்.
புகல்பத மடைவிப் பிக்கும் பொருளினைப் போற்றல் செய்
சருவபூ ரணவ கண்ட சச்சிதா னந்த சாந்த
நிருமல நிருவி கார நித்திய சுத்த முத்த
நிருமம நிரகங் கார நிஷ்கள வடிவாய் நின்ற
பிரமமாம் பரசி வத்தைப் பிரிவறச் சிந்தை செய்வாம். (உ)
சூதசங் கிதையி னான்காச் சொல்லிய கண்டங் கட்கு
ளோதிய நான்காங் கண்டத் துத்தர பாகந் தன்னிற்
கோதிலாக் கிரந்த வாக்காற் குறைவறக் கூறப் பட்ட
சூதகீ தையினை யின்று சுத்தமாந் தமிழிற் சொல்வேன். (ங)
சருவமுந் தெரிந்தோ னான சத்திய வியாசன் சொன்ன
வரியதா மிந்த நூலை யற்பமா மென்றன் வாக்கா
லுரைசெயு நீதி யோரி லோவிய விந்து நானும்
புரணமா மிந்து வின்முன் பொலிவனென் றோதல் போலாம்.

பாயிரம் முற்றிற்று.

### முதலாவது

## நைமிசாரணிய முனிவர் சூதமா முனியைத் துதித்து வினவும் அத்தியாயம்.

சத்திய ஞானா னந்த சந்ததா நந்த மான
வத்தமில் பரசி வத்தை யகமென வனுப வித்து
நித்தரங் காழி யேபோ னிச்சல மூன்ற னாகிச்
சுத்தமா நிட்டை யின்கண் சூதமா முனியி ருந்தான். (க)

மந்தவா சகம்பொ ருந்தி மலர்முகத் தெளிவு டைத்தாய்ச்
சந்ததந் தனது தேசாற் சகமனைத் தையும் விளக்கி
யிந்தமே தினியின் மற்றோ ரினனென விளங்கு கின்ற
சுந்தர வடிவா மந்தச் சூதமா முனியை நோக்கி. (உ)

பரமமா முனிவ ரியாரும் பரவிய வன்பி னோடே
தரணியிற் றண்ட மேபோற் றாழ்வுற வீழ்ந்தெ ழுந்து
சிரசிலஞ் சலிபந் தத்தைச் செய்திடு கரத்த ராகி
விரிவுறு மகிழ்வி னோடே விவிதமாய்ப் போற்ற லுற்றார். ()

பரசிவ னருளாற் பெற்ற பரவறி வுடையோய் போற்றி
பரசிவ னுபய பாத பதுமவன் புடையோய் போற்றி
பரசிவ னன்ப ருக்குட் பரமனே சாந்த போற்றி
பரசிவ னன்ப ருக்கே பரமறி விப்போய் போற்றி. (ச)

வேதவே தாந்த மாகும் விவிதமாம் பதுமக் கூட்ட
மியாதையும் விகாசஞ் செய்திங் கிலங்கிய வினனே போற்றி



யாதியாம் வியாச ஞான மாகிய தீபத் திற்கோர்
சோதிசெய் திரியே போற்றி சுத்தமாம் பகவ போற்றி. (ரு)

நிகிலமாம் புராண மென்னு நித்தில மாலை கோக்க
வகலுஞ்சூத் திரமா கின்ற வமலநின் சரணம் போற்றி
பகவநம் பவமா கின்ற பரவிய மரஞ்சே திக்க
நிகழ்வுறு குடார மான நிமலநின் சரணம் போற்றி. (சு)

கருணைவா ரிதியே போற்றி கலங்கிய சீவர்க் கெல்லாம்
பிரியமே யளிக்கா நின்ற பெரியநின் சரணம் போற்றி
சருவமாந் துகளு மற்ற சாந்தநின் சரணம் போற்றி
நிருமலக் குண நிறைந்த நிமலநின் சரணம் போற்றி. (எ)

தரணியின் மனிதர்க் கெல்லாந் தாயுமா னவனே போற்றி
யரியனும் வியாச னுக்கிங் கானநற் சீட போற்றி
கருமநிட் டையினைச் சார்ந்து களங்கமற் றவனே போற்றி
பிரமநிட் டையினைச் சார்ந்து பேதமற் றவனே போற்றி.

தரணியிற் சாட்சா துண்மைத் தத்துவ நம்பி னோர்க்குப்
பொருவிலா வந்த வுண்மைப் பொருள்வடி வானோய் போற்
சருவமாம் பூதங் கட்குஞ் சாரனே சமனே போற்றி [றி
சரணமா ரெமக்கு நேரே சற்குரு வானோய் போற்றி. (௯)

சந்தத போதா னந்த சாந்தமா மான்ம ரூபந்
தந்தநங் குருவே போற்றி தந்தையு மானோய் போற்றி
யந்தநின் சரணம் போற்றி யகண்டவா னந்த போற்றி
பிந்தியும் பேரற்றி போற்றி பிரியனே பின்பும் போற்றி.

இந்தவா றறிஞ ரியாரு மிதமெலா மளிக்கா நின்ற
சுந்தர வடிவ மான சூதமா முனியை யேத்தி

யிந்தனா லத்தி யுள்ளோ ரெவர்க்குமே யிதத்தை வேண்டித்
தந்தைநின் கீதை தன்னைத் தயையினு லருள்வா யென்முர்.

சொன்னவை வினவப் பட்ட சூதமா முனியும் பின்ன
ரன்னதன் சொருபா னந்த வனுபவ நின்று மீண்டிங்
குன்னிய வாறெ வர்க்கு முவந்ததை யளிக்கா நின்ற
தன்னுடை யாசா னென்னத் தகுவியா சனைநி னைந்தான்.

புகலுமா நினைத்த லோடும் பூரண முணர்ந்த வியாச
னகிலமா மவய வத்தி லணிந்தநீ றுடையோ னுகி
நிகழ்திரி புண்ட ரத்தை நெற்றியா தியிலு டைத்தாய்
மகிழ்தரு ருத்தி ராக்க மாலையா பரண னுகி. (கரு)

சருமவத் திரமு டுத்திச் சைவசின் னங்க ளியாவும்
பிரியமாய்த் தரித்துச் சீடன் பேணிய தளிக்க வேண்டிக்
கருணையா லுதித்தான் முன்னே கருணைவா ரிதியா மந்தக்
குருபர வியாசன் றன்னைக் குறைவிலாச் சூதன் கண்டான்.

தேசிக ரரசர்க் கெல்லாந் தேசிக னுகா நின்ற
மாசிலாக் குரவன் றன்னை மகிழ்வுடன் சூத னேக்கித்
தேசுள தனது சீடத் திரளுடன் பணிந்து நன்மு
யாசன முதல ளித்தே யர்ச்சனை யடைவாய்ச் செய்தான்.

எதுமே யறிந்த வியாச னினிமையா யிவனை நோக்கிச்
சூதவென் சீட மெத்தச் சுபமுனக் குற்ப விக்கு
மாதவ முனிவ ருக்கு மகனேயின் றுனக்கு மென்னு
லேதுதா னுகத் தக்க திதையியம் பெனவே சொன்னுன்.



ஈதினைக் கேட்டுச் சூத னெவர்க்குமே யிதத்தை வேண்டிச்
சாதுவாங் குருவை நோக்கிச் சாற்றுவான் மதுர மாக
மாதவ வலியாற் சித்த மலமிலா முனிவ ரீவர்
கேதமி லெனது கீதை கேட்பமா விச்சை யுள்ளோர். (கஎ)

நாதநின் னருளி ருந்தா னவிலலா மெனது கீதை
யீதுதா னிலாத தாகி லிஃதினை நவில வொண்ணு
வாதலா லெங்கண் மீதின் றருளுனக் கிருக்கு மாகிற்
சூதநின் கீதை தன்னைச் சொல்லென வாஞ்ஞை செய்வாய்.

என்னலுங் கேட்டு வியாச னினியநற் கருணை கூர்ந்தின்
றுன்னுடைக் கீதை கேட்ப வுவந்தவிம் முனிவர்க் கெல்லா
மன்னதை யருள்வா யென்று னவனைமற் றுலிங் கித்தான்
பின்னவ னிதயந் தன்னைப் பிரியமாய்ப் பரிசஞ் செய்தான்.

சருவநா யகனே யான சாம்பமூர்த் தியைநி னைந்து
கருணைகூர் விழியா னேக்கிக் கலங்கமி லவன் மனத்திற்
திருமகா தேவன் றன்னைத் திரமுற விருத்தி யன்னேன்
சிரசினை மோந்து பார்த்துச் சீக்கிர மறைந்தான் வியாசன்.

பின்னரு மந்தச் சூதன் பிறங்குமுக் கண்ண னுகி
யன்னிய தேவர்க் கெல்லா மதிபனுஞ் சாம்ப மூர்த்தி
தன்னினைத் தியானஞ் செய்து தண்டென மிகப் பணிந்து
தன்னுடை யாசான் வியாசன்றன்னையுந் தியானஞ்செய்தான்.

சிரசிலஞ் சலிபந் தத்தைச் செய்துபஞ் சாக்க ரத்தைப்
பிரியமாய்த் தான்செ பித்துப் பின்னரம் முனிவர் தம்மை

யருண்மிகு விழியாற் பார்த்தா னவ்விதச் சூதன் றன்னை
யுரிமா முனிவ ரெல்லா முவகையாற் பணிந்து நின்றார். ()

வேறு.

சருவ மாகிய சந்துக்க ளுக்குநற்
பிரிய மேசெயப் பேணிய சூதனும்
புரையி லாது பொலிந்திடுந் தன்னுடை
யரிய கீதை யறையத் தொடங்கினன். (உ௬)

ஆ திருவிருத்தம் உ௬.

சூதகீதை க-வது அத்தியாயம் முற்றிற்று.

---

இரண்டாவது

## அத்துவிதவுண்மையும் உருத்திரமூர்த்தியின் மேன்மையுமுரைக்கும் அத்தியாயம்.

பிரமவித் துக்க ளான பெருமைசேர் முனிவ ரேநீ
ரிருதய வொருமை தன்னை யெய்தினே ராகி நின்று
சுருதிசம் மதமாய் மெத்தச் சூக்கும மாகா நின்ற
பரசிவ ஞானந் தன்னைப் பகருவம் பாங்காய்க் கேண்மின்.

சத்திய ஞான னந்த சாந்தவத் துவித மாகி
நித்திய சித்த மாகி நிகழ்ந்திடும் வத்து வொன்றே
யித்தனை சகத்தி னுக்கு மேகமாங் கர்த்தா வாகி
வித்தரப் பசுபா சத்தின் விலட்சண மாகி நிற்கும். (உ)



ஆதிவா னாதி யைந்து மதனுடைக் குணங்க ளைந்தும்
போதமார் பொறிக ளைந்தும் புகல்கன்மப் பொறிக ளைந்து
மோதுபிரா ணாதி பத்து முளமுதற் கரண நான்கு
மீதெலாஞ் செய்வ தற்கிங் கேதுவா மவித்தை யொன்றும்.

ஓதிய முப்ப தோடைந் துருவமா மிவைகள் சீவர்க்
கேதமாம் பந்தஞ் செய்த வேதுவாற் பாச மாகு
மீதினாற் பந்தப் பட்டிங் கிசைந்துள சீவ ரியாருங்
கோதுறு பசுக்க ளென்றே கூறலாங் குறைவற் றோரே. (ச)

சகலமாஞ் சகசி வர்க்குஞ் சந்ததங் கர்த்தா வாகி
நிகழ்வுறும் பரசி வன்றா னித்தமும் பதியா கின்றோ
னிகழ்வுசெய் யஞ்ஞா னத்தோ டிசைந்துள பசுக்க ளுக்குப்
பகருமவ் வஞ்ஞா னந்தான் பற்றிய தனாதி யாக. (ரு)

அகிலமாஞ் சீவ ருக்கு மனாதியா மஞ்ஞா னந்தா
னிகழ்வுசெய் சம்சா ரத்துக் கேதுவா மெதனா லென்னி
னிகழ்வுறுந் தன்சொ ரூப நிலைமையை யறியா தத்தால்
வெகுவித சுகதுக் கத்தை வெறிதிவ ரடைந்தா ரன்றே. (சு)

இரவியின் பிரகா சத்தா லிருளெலா நீங்கு மாபோற்
சொருபஞா னத்தி னாலே சொன்னவஞ் ஞான நீங்கும்
பரவிய வவித்தை தன்னின் பலவிதப் பகுப்பாற் பேத
முரைதருஞ் சீவர்க் குண்டா முண்மையிற் பேத மில்லை. (எ)

பரவிய மாயை தன்னின் பலவிதப் பகுப்பாற் பேத
மொருமையா மீசர்க் குண்டா முண்மையிற் பேத மில்லை

விரிதரு முபாதி யாலே விவிதமாங் கடவின் மாவின்
பிரிவுபோற் சிவே சர்க்கும் பேசிய பேதந் தோன்றும். (அ)

ஓதிய சீவ னுக்கிங் குபாதியின் பேதத் தாலே
பேதமு முயர்ச்சி தாழ்வின் பிரிவுமே கற்பி தம்போ
லோதிய வீச னுக்கு முபாதியின் பேதத் தாலே
பேதமு முயர்ச்சி தாழ்வின் பிரிவுமே கற்பி தந்தான். (கூ)

தேகவிந் திரிய மாதித் திரளினை யனுச ரித்த
மோகவா தனைபே தத்தான் முளைத்தபே தத்தை யுற்ற
சோகமா ரவித்தை தானே சொல்லிய சீவ பேதத்
தாகின வேது வன்றி யன்னிய மேது வன்றால். (கo)

மிகுந்தமுக் குணபே தத்தை மேவுவா தனைபே தத்தாற்
பகுந்துள மாயை தானே பரபேத வேது வன்றிச்
செகந்தனி லப்பே தத்தைச் செய்யவே றேது வில்லை
வகுந்துள பரபே தத்தின் வகுப்பினை யுரைப்பக் கேண்மின்.

மருவுமுக் குணங்க ளுக்குண் மாயையின் சத்து வந்தான்
சரிரமாம் யாவ னுக்குச் சகத்தினைச் சங்க ரிக்க
வுரவிய தாம தந்தா னுதவியே யாகு மன்னோன்
றிரிவித மூர்த்தி கட்குட் டிகமுருத் திரனா கின்றோன். (கஉ)

மருவுமுக் குணங்க ளுக்குண் மாயையின் றூம தந்தான்
சரிரமாம் யாவ னுக்குச் சகத்தினைப் பாலிப் பிக்க
வுரவிய சத்து வந்தா னுதவியே யாகு மன்னோன்
றிரிவித மூர்த்தி கட்குட் டிகழ்ந்திடு மரியா கின்றோன். (கங)



மருவுமுக் குணங்க ளுக்குண் மாயையி னிராச தந்தான்
சரிரமாம் யாவ னுக்குச் சகத்தினைச் சிருட்டி செய்ய
வுரவிய ராச தந்தா னுதவியு மாகு மன்னோன்
றிரிவித மூர்த்தி கட்குட் டிகழ்ந்திடு மயனா கின்றோன். ()

உரைதரு மூர்த்தி கட்கு ளுருத்திர மூர்த்தி வெண்மை
கருதிய வரியென் மூர்த்தி கருமையவ் விரிஞ்சன் மூர்த்தி
ப்ரவிய விரத்த மென்று பகர்ந்தவிவ் விதமே யாகப்
புரையற நினைக்க வேண்டும் போகமோட் சப்பொருட்டால்.

சத்துவ குணத்தி னாலே சாதமாம் வெண்மை யென்று
மெத்திய ரசோகு ணத்தான் மேவிய திரத்த மென்றுந்
தொத்திய தமோகு ணத்தாற் றொடர்ந்தது கருமையென்று
மித்திர நியமத் தாலே யிவர்களிவ் வண்ண ரேயாம். (கசு)

பரவுமும் மூர்த்தி கட்கும் பரமநா மென்னும் புந்தி
பரவியே யிருப்ப தாலே பலமறை மிருதி மற்றும்
பரவிய புராண மியாவும் பாரத முதல னைத்தும்
பரவுமம் மூர்த்தி தம்மைப் பரமமே யென்று ரைக்கும். (கஎ)

சுத்தசத் துவவு பாதித் தொடர்பினன் மூவ ருக்குந்
தத்துவ முணரு ஞானத் தகைமைதா னிருப்ப தாலே
வித்தகப் பரமத் துக்கும் விளம்புமும் மூர்த்தி கட்கு
மொத்திடாப் பேத மில்லை யுண்மையா நோக்குங் காலே. ()

அரனரி யயனென் றிவ்வா றூகிய வுபாதி சார்ந்த
வுருவமாய் நோக்குங் காலை யோதுமும் மூர்த்தி கட்கும்

பரமுடன் பேத முண்டு பரமிவ ராகா ரேனு
முரைதரு மூவ ருக்கு ளுருத்திர னுத்த மன்ருன். (கக)

எதெனி லின்ப ஞான மெவைக்குமே யேது வாகி
யோதிய விருகு ணத்தி னுயர்ந்துள சத்து வத்தைத்
தீதிலா வுருத்தி ரன்றன் றேகமா யடைந்த தாலே
யோதிய வனைவ ருக்கு முருத்திர னுத்த மன்ருன். (உ0)

உரைதரு மேது வாலே யுருத்திரன் றனக்கே மெத்தப்
பரமுண ரறிவி லங்கும் பலவித மான மற்ற
வரியயன் முதலாந் தேவர்க் கவ்வறி விவள வில்லை
விரிவுற விவ்வர்த் தத்தை விளம்புவா முனிவர் கேண்மின்.

பரவிய சத்து வத்தாற் பரமமாந் தத்து வத்தை
யுரைதரு முருத்தி ரன்ற னுருவமாய் மிகம திப்ப
னரியய ஞதி தேவ ரஃதிலாத் தன்மை யாலே
யரியய ஞதி ரூப மகமென மிகம திப்பர். (உஉ)

அரியய ஞதி தேவ ரமலமாஞ் சத்து வத்தை
யுருவமாய் மருவா நின்ற வுருத்திரன் றன்னை யென்றும்
பரமதத் துவமா மென்றே பாங்குற மதிப்ப ரன்றிச்
சருவதாத் தங்க ளோடே சமமென மதிக்க மாட்டார். ()

உருத்திரன் காரி யார்த்த முருத்திர வபிமா னத்தைக்
கருத்துற வெத்த னத்தாற் கருதுவ னெப்போ தேனும்
பரித்திடு மரியே யாதி படிவுடை யபிமா னத்தைத்
திருத்தமா யரியே யாதி தேவர்கண் மதிப்ப ரன்றே. (உச)



அரியய ஞதி தேவ ரமலமாந் தத்து வத்தை
யுரவிய முயற்சி யாலே யுணருவர் சொரூப மாகப்
பரவிய வுருத்தி ரன்ருன் பரமமாந் தத்து வத்தை
மருவுமோர் முயற்சி யின்றி மாசற வனுப விப்பன். (உரு)

சத்துவ மிகுந்த தாலே சந்தத முருத்தி ரற்குத்
தத்துவ முணரும் புந்தி தடையிலாச் சுபாவ மாகுஞ்
சத்துவ மிகாத தாலே சாற்றிய வரியா திக்கு
மெத்தரி யாதி புந்தி மேவிய சுபாவ மாகும். (உசு)

ஓதிய நீதி யாக வுத்தம னுருத்தி ரன்ரு
ளுதலா லரியே யாதி யமரரை யர்ச்சிப் போர்க்குக்
கோதிலாப் பரம்ப தத்தைக் கூடுதல் விரைவி லில்லை
யோதிய வப்ப தத்தை யொன்றலா மடைவே யாக. (உஎ)

வேதவித் துக்க ளான விமலமா முனிவர் கேண்மி
னுதியா முருத்தி ரன்ற னர்ச்சனை செய்ப வர்க்குக்
கோதிலாப் பரம்ப தத்தைக் கூடலாம் விரைவிற் றுனே
யோதிய வப்ப தத்தை யொன்றவோ ரடைவு மில்லை. (உஅ)

சத்துவ வடிவ மாகச் சாற்றிய வுருத்தி ரன்ருன்
மெத்தவுந் தேவர்க் கெல்லா மேன்மையாய் நிற்போ னென்
மித்திற வுறுதிப் புந்தி யேகமா முத்திப் பேற்றை [னு
நித்தமா யடைவ தற்கு நிமித்தமாஞ் சீவர்க் கெல்லாம். ()

சத்துவ வடிவ மாகச் சாற்றிய வுருத்தி ரற்கு
நித்தமு மேலா கின்ளுேர் நிகழரி யாதி யோரென்

றித்திற வுறுதிப் புந்தி யீனமாஞ் சம்சா ரத்தை
மெத்தவு மடைவ தற்கு மேவிய நிமித்த மாகும். (௩௦)

பரவுமோ ருவமை யற்ற பரமமாம் பிரமத் துக்கே
யரனரி யயனே யாதி யமரர்கண் மேலோ ரென்று
மருவிய வுறுதிப் புந்தி மயக்கமாஞ் சம்சா ரத்தைப்
புரையுற வடைவ தற்குப் பொருந்திய நிமித்த மாகும். ()

அரனரி யயன்சு ராட்டு மாகிய சம்மி ராட்டும்
விரவிய புரந்த ராதி விவிதரும் பிரம மென்றே
மருவிய வுறுதிப் புந்தி மாசிலா முத்திப் பேற்றை
நரர்களிங் கடைவ தற்கு நண்ணிய நிமித்த மாகும். (௩௨)

அரியமந் திரியி டத்தி லரசெனச் செய்த புந்தி
புரையறு பயனை நல்கும் புகன்றவவ் வரசி டத்தின்
மருவிய வமைச்ச புந்தி மாவனர்த் தங்கொ டுக்கும்
பரிசுபோற் பிரம புந்திப் பான்மையுங் கண்டு கொண்மின்.

அதலாற் பிரமத் தின்க ணன்னியப் புந்தி செய்த
லேதமா மனர்த்தந் தன்னை யீன்றிடு மைய மில்லை
பேதமாம் பொருள னைத்தும் பேதமில் பிரமமேயென்
றேதமில் பிரம புந்தி யீன்றிடும் புருடார்த் தத்தை. (௩௪)

இத்திற மாகி ஞானு மீனமி லுருத்தி ரன்கண்
மெத்தவும் பிரம திட்டி மேன்மையா மற்றோ ரின்க
ணத்திற மேன்மை யாகா தவரிடைப் பரவி ளக்க
நித்தமு மற்ப மாக நிகழ்வதால் வேதி யோரே. (௩௫)



அரியநற் சத்து வந்தா னுந்தர மரனுக் காகும்
வரமிலாத் தாம தந்தான் வாகிய மன்னோ னுக்கா
மருமையி ரும தந்தா னுந்தர மாலுக் காகும்
வரமெனுஞ் சத்து வந்தான் வாகிய மன்னோ னுக்காம். ()

அருமையி லிராச தந்தா னுந்தர வாகி யங்க
ளிருமையும் விரிஞ்ச னுக்கா மிந்தவா றறியா மூடர்
மருவுசத் துவகு ணத்தை மாத்திரம் பற்றிக் கொண்டே
யரியுமே லரனுக் கென்றே யறைவரிம் மோக மென்னே. ()

சருவதா வுட்பு றத்துஞ் சத்துவ மிலாத தாலே [ணர்
யொருவரும் விரிஞ்சன் றன்னை யுயர்ந்தவ னெனவே யெண்
நரர்களம் மயலை விட்டு நவின்றவிவ் வரனே யார்க்கும்
பெருமையான் மேலோ னென்று பேணியேயறியவேண்டும்.

சுருதியான் மிருதி யாலுஞ் சொல்லிய தனுட்டா னித்து
விரிவுறு வெகுசென் மத்தில் விமலமாஞ் சித்த ருக்கே
யரியினு மரனே மேலோ னுனவ னென்னும் புந்தி
மருவிடு மற்றோ ரார்க்கு மதியிது மருவ மாட்டா. (௩௯)

சருவதா மாபா வத்தைச் சார்ந்துள மானி டர்க்கே
யரனினு மரியே மேலோ னுனவ னென்னும் புந்தி
மருவிடு மதனு லன்னோர் மயக்கமாஞ் சம்சா ரத்திற்
சருவதா வுழலா நின்று சகலமாந் துயருஞ் சார்வர். (௪௦)

நிருவிகற் பமதே யாக நிகழ்பர தத்து வத்திற்
சருவதா யாவர்க் கேனுஞ் சலனமி னிட்டை யுண்டேற்

பொருவிலா வன்னோ ருக்கே புரியுமோர் முயற்சி யின்றி
யருமையா முத்தி சித்தி யாயிடு மைய மில்லை. (௪௧)

நிருவிகற் பமதே யாக நிகழ்பர தத்து வந்தான்
கருதில ராகு மென்னிற் களங்கம்யா தொன்று மற்ற
நிருமல நிருவி கார நித்திய போதா னந்த
பரசிவன் றானே சாட்சாத் பரமதத் துவமா கின்றான். (௪௨)

அன்னவன் லீலை யாலே யம்பிகா சகித னாகி
மன்னுமுக் கண்ண னாகி மதியரை முடியோ னாகி
யன்னதன் சொரூபா னந்த வனுபவ மிகுந்த தாலே
மன்னிய தாண்ட வத்தின் மாமகிழ் வுடையோ னாகி. (௪௩)

திரிவித மூர்த்தி யானுந் தினமுபா சிக்கப் பட்டுச்
சருவமு மறிந்தோ னாகிச் சருவசத் தியுமு டைத்தாச்
சுருதியின் முடியி னானுஞ் சொல்லொணா மகிமை யோனா
யருளினா லெமையொத் தோரை யாளவே யமையா நிற்பன்.

அரியதா மிவித மூர்த்தி யகிலரின் விசேட மாகச்
சருவதா யாவ னுக்குச் சகந்தனில் விளங்கு மந்தப்
பரசிவன் றானே சாட்சாத் பரமதத் துவமற் றொன்றும்
பரமதத் துவமே யன்று பகர்ந்தன முண்மை யாக. (௪௫)

அரியப னாதி யான வமரரை மோகத் தாலே
பரமதத் துவமா மென்று பகருவர் சிலரன் னோர்க்கிங்
கரியநற் கதியே யில்லை யாதலா லமர ரன்னோர்
பரமதத் துவமா மென்னல் பகரல்மாத் திரமே யாகும். (௪௬)



ஆதலான் முன்னு ரைத்த வவ்விதத் திவ்ய மூர்த்தி
யாதொரு பரசி வற்கிங் கிலங்கிடும் விசேட மாகப்
போதவா னந்த வுண்மைப் பூரண வடிவா மந்தச்
சாதுவாஞ் சிவனே சாட்சாத் தத்துவ மற்றோ ரன்றால். (௪௭)

அரனரி யயனென் றிவ்வா றவர்வகுப் புற்ற போதும்
பரனுடை வகுப்பைத் தானே பற்றினோ ரன்றிச் சீவர்
மருவிய வகுப்பைப் பற்றார் மற்றுமே யிவ்வர்த் தத்தை
விரிவுற விளம்பக் கேண்மின் விமலராம் வேதி யோரே. ()

ஓதிய வவித்தை தன்னை யுபாதியா வுடைய சித்தே
கோதுறு சீவ னென்று கூறலா மற்ற தன்றிங்
கோதிய மாயை தன்னை யுபாதியா வுடைய சித்தே
கோதிலாப் பரனா மென்று கூறலா மற்ற தன்றால். (௪௯)

மாயைகா ரியமே யாக மருவுமுக் குணபே தத்தை
யாயதம் முபாதி யாக வடைந்தர னாதி யானோர்
மாயையே யுபாதி யாக மருவிய பரன்வ குப்பே
யாயவ ரிருப்ப ரன்றி யன்னிய வகுப்பே யாகார். (௫0)

பரனுடை வகுப்பைத் தானே பற்றிநிற் கின்ற தன்மை
சருவதா வரனா திக்குச் சமானமே யான போது
மரியய னனைய ருக்கு மமலமா மரனே மேலோ
னுரைதரு மிவ்வர்த் தத்தி லொன்றுமோ ரைய மில்லை. (௫௧)

ஏதெனி லரிவி ரிஞ்ச ரிவர்தம தருவி னாலும்
பேதமா மவதா ரத்தைப் பெற்றதம் முருவி னாலுங்

தீதிலா வரனைத் தானே திரமுறப் பூசிக் கின்றா
ராதலா லரனே யன்னோர்க் கதிகனென் றறிய லாமே. (௫௨)

ஈதுபோ லுருத்தி ரன்ற னியல்பதா முருவி னாலே
யோதிய வரிவி ரிஞ்ச ரொன்றிய வுருவை யேனும்
பேதமா மவதா ரத்தைப் பெறுமவ ருருவை யேனு
மேதுமே பூசை செய்யா னிதனினா லிவனே மேலோன். ()

அருளினா லுலகர் தம்மி னனுக்கிர கத்தை வேண்டி
யரனுமே யெப்போ தேனு மடைந்ததன் னவதா ரத்தா
லரிமுத லமரர் தம்மை யர்ச்சனை செய்வ னந்த
வரியயன் முதலோர் செய்யு மர்ச்சனை யவ்வா றன்றால். ()

உரைதரு முண்மை யோரா வுணர்வில ரரனு மேதா
னிருவரை யர்ச்சித் தானென் றிவ்வளவு மாத்தி ரத்தைக்
கருதியே மாயை யாலே கலங்கிய மனத்த ராகிச்
சருவதா மூவ ருந்தான் சமானரே யென மதிப்பர். (௫௫)

இப்படி மோகித் தோரா யின்னவர் சமான ரென்றே
செப்புவர் வருந்தி யுந்தான் சிலவர்கள் சிலவர் மற்று
மொப்பிலா வரனின் மேலோ ரோதரி விரிஞ்ச ரென்றே
பற்பல விதமே யாகப் பகருவர் மோகத் தாலே. (௫௬)

அரனொடு சமானத் தன்மை யரியய னிருவ ருக்கு
மருவிடு மென்ப தாக மாயையான் மயங்கு கின்றோ
ரருமகா பாத கத்தை யறவுமே யடைந் தோ ராகி
நரகமாஞ் சாக ரத்தி னடுவினில் விரைவில் வீழ்வர். (௫௭)



அரனினு மரிவி ரிஞ்ச ரதிகரே யாவ ரென்று
புரையுறு மோகந் தன்னைப் பொருந்தியே புலம்பு கின்றோர்
விரிவுறு நரகத் தீயால் விவிதமாய் வெதுப்பப் பட்டுச்
சருவதாத் துன்பஞ் சார்வர் சத்தியஞ் சங்கை யில்லை. (௫௮)

உரவிய பூனைக் காகு வொன்றிலே யுறுதி போலப்
பரமவத் துவித மொன்றே பற்றிய சிலவ ரிங்கு
பரவுசோ பாதி யான பான்மையா லிருவ ருந்தா
னரனொடு சமான மென்ப ரவரறிந் தவரே யன்றால். (௫௯)

சிரசுபா தங்க ளியாவுந் தேகமாந் தன்மை யாலே
யொருமையாய் நின்ற போது மோதிய சிரசி னோடே
சருவதாப் பாதங் கட்குச் சாமிய மிலாத தேபோ
லரனொடு மரியா திக்கிங் கானசா மியமே யில்லை. (௬௦)

ஆனவாய் குதமி ரண்டு மகல்வெளி வடிவா னாலு
மூனமில் வாயி னோடே யூனமாங் குதத்தி னுக்கிங்
கானசா மியமே யில்லை யந்தவா றரியா திக்கு
மீனமி லரன்ற னோடே யெய்துசா மியமே யில்லை. (௬௧)

உரைதரு நீதி யாக வுபாதியைச் சார்ந்து நின்ற
வுருவினா லிங்கெல் லோரு மொத்தவ ரென்ப தொண்ணா
தரியயன் முதலோ ரிவ்வா றரனொடு சமமா காரே
லரனினு மன்னோர்க் கெங்ஙனதிகமாந் தன்மை சொன்மின்.

சுருதியு மிருதி தானுஞ் சூக்கமாம் புராண வாக்கு
மரியய னிந்தி ராதி யகிலரி னுருத்தி ரன்றான்

பரமமாம் வடிவி னாலும் பகர்ந்ததன் வடிவி னாலுஞ்
சருவதா வதிக னென்று சாற்றுதே விவித மாக. (சுங)

சுருதியே முதலாம் வாக்கு சொல்லிய வரியா திக்கு
மரனினு மதிகத் தன்மை யறைகுதே யென்னிற் கேண்மின்
பரவிய வந்த வாக்குப் பரமமாம் வடிவி னாலே
யரியய னாதி யோர்க்கு மதிகமாந் தன்மை சாற்றும். (சுச)

அரியய னாதி யாக வமைந்துள வடிவி னாலே
பரவிய சுருதி யாதி பகர்ந்தவவ் வரியா திக்கே
யரனினு மதிகத் தன்மை யறைந்திட வில்லை யென்று
முரைதரு விதமே யாக வுத்தமத் தன்மை காண்மின். (சுரு)

விரிவுற விளம்பி யென்ன விவிதமாஞ் செந்துக் கட்கு
மரனரி விரிஞ்சர் தம்மி னவதார வுருவ மேலாம்
பரவுமவ் வவதா ரத்திற் பரவிய வன்னோர் மேலா
முரைதரு மன்னோ ருக்கு ளுருத்திரன் மேலோ னுவான். ()

அவனினு மும்மூர்த் திக்கு மாதிகா ரணமாய் நின்ற
சிவனுரு மேலா மத்தின் சிவனெனுஞ் சத்தி யென்னு
மிவிதமாம் பகுப்பு டைத்தா வீட்ண வவத்தை யுற்றுத்
தவறிலாச் சத்தி யாதி தகைமைசேர் சிவனே மேலாம். ()

இருவிதப் பகுப்பு மற்றே யேகமாய்ப் பூன்ற மான
நிருமல நிருவி கார நித்திய போதா னந்தப்
பரசிவ னவனின் மேலாம் பகர்ந்தவிப் பரசி வற்குப்
பெரியதாய் வேறொன் றில்லை பேசிய துண்மை யேயாம். ()



உரைதரும் பரசி வன்ற னுருவினை யாலோ சித்து
விரிவிலா தொடுக்க மாக விளம்பிய வுறுதி கேண்மின்
பரசிவன் றனக்கு வேறாய்ப் பலவிதங் காண்ப தெல்லாம்
பரசிவன் சொரூப மேயாம் பகர்ந்ததி லைய மில்லை. (சுகூ)

பரசிவன் றனக்கு வேறாய்ப் பலவெனக் காணப் பட்ட
வுருவெலாஞ் சிவனே யென்றிங் குறுதியாய் வேதாந் தத்தா
பிரிவற வறிப வன்றான் பிரமமாந் தத்து வத்தைப் [ற்
புரையற வரிந்தோ னீதிற் பொருந்துமோ ரைய மில்லை. ()

கருதுவே தாந்த வாக்காற் கற்பித மான யாவும்
பரவதிட் டான மான பரசிவ னென்றே பார்ப்போன்
புரணமா முத்தி சார்வன் புகன்றதி லைய மில்லை
யுரியரே பரமார்த் தத்தை யுள்ளவா றுமக்கு ரைத்தேம். ()

அறிந்திடப் பட்ட ஞால மகிலமு மறிவே யாகச்
செறிந்துள சிவமே யாகுஞ் சிறிதும்வே றில்லை யென்றிங்
கறிந்தவ னியாவ னன்னோ னறிவுருப் பரசி வத்தைச்
செறிந்துடன் முத்த னுவன் சிறிதுமே சங்கை யில்லை. (எஉ)

சுருதியா லூகந் தன்னாற் சுத்தமா மனுப வத்தாற்
றெரிவுறப் பட்ட விந்தத் திரிசிய ஞால மியாவுந்
தெரிவுருச் சிவமே யென்று திடமுற வறிப வன்றான்
பரமமாந் தத்து வத்தைப் பாங்குற வறிந்தோ னுவன். (எங)

சருவதாப் பிரமந் தன்னைச் சகத்தெனப் பார்ப்போன் ஞான
மரியநன் ஞான மாகா தஃதுதான் மயக்க மேயாஞ்

சருவமும் பிரம மென்றே சந்ததம் பார்ப்போன் ஞான
மரியகன் ஞான மாகு மறைந்ததி லைய மில்லை. (எசு)

தெரிந்திடப் பட்ட தாயுந் தெரிந்திடப் படாத தாயும்
பொருந்திய பாவா பாவப் பொருள்வடி வான யாவும்
விரிந்துள பரசி வன்றன் விமலசிற் சொரூப மென்றே
நிரந்தரம் வேதாந் தங்க ணிகழ்த்திய கருத்தா மென்றும். ()

சுருதியின் வசனத் தாலே சொல்லிய படியே யாமு
மருளினு லகில மான வருத்தமு முமக்கு ரைத்தே
முரியரே யிவையை யெல்லா முளந்தனிற் றரிப்பீ ராகிற்
பரமமாங் கதியுங் கட்குப் பாங்குற விங்கே யுண்டாம்.(எசு)

வேறு.

பிரிவு போலப் பிறங்கிய யாவையுந்
தரள வானந்தத் தாண்டவ மாடுநம்
பொருவி லாச்சிவன் பூரண ரூபமென்
றரிய மாமறை யாய்ந்துரைக் கும்பொருள். (எஎ)

இரண்டா மத்தியாயம் முற்றிற்று.

ஆக வத்தியாய மிரண்டுக்குத் திருவிருத்தம். க00.

---

மூன்றாவது
## சுருதிக்கிப் பிரமாணத்துவந் தாபித்து அதன்வழியா யத்துவிதவுண்மையறையும் அத்தியாயம்.

சச்சிதா னந்த மாகச் சாற்றிய சிவனி டத்திற்
சிச்சட வடிவ மான செகமெலாந் தோன்று மன்னேன்
நிச்சல நிருவி கார நிருமல வேக னேனு
மிச்சர வசர மெல்லா மீன்றிடுந் தகைமை யோன்முன். (க)

மந்திர மாம ருந்து மணிமுதன் மகிமை தன்னைச்
சிந்தனை செய்வ துந்தான் செகந்தனி லருமை யாமேற்
சந்தத மனந்த சத்தி சார்ந்தவிப் பரசி வன்ற
னந்தமின் மகிமை தன்னை யறிந்திட வெவரே வல்லோர். ()

நிருமல மானே னென்று நிகிலமு மீன்றோ னென்று [மின்
மிருமையு மொருவ னுக்கிங் கிசைந்திடா தென்னிற் கேண்
சருவமா னங்க ளுக்குஞ் சாமமா வனாதி யான
சுருதியே யிவித மாகச் சொல்வதால் விரோத மில்லை. (ங)

அரியமா மறை யறிந்த வனகரே பரசி வற்கே
நிருமல நிருவி கார நிர்த்வயத் தன்மை யுந்தான்
பிரிவுறு மிச்ச கத்தின் பிறப்பிருப் பிறப்பை யுந்தான்
பரமமாம் வேதந் தானே பகர்ந்திடக் கண்டோ மன்றோ. ()

நிருவிகா ரத்தி னுக்கு நிகிலமும் படைக்குந் தன்மை
விரவிய திட்ட யுத்தி விரோதமா மென்ன வொண்ணு

